## இடைநிலை.

**39.** பெயரின் இடைநிலை.— MEDIAL PARTICLES OF NOUNS.

இலக்கியங் கண்டதற் கிலக்கணம் இயம்பலின்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை எனலே.
[பத. சூ. 14.]

[இலக்கியத்தைப் பார்த்து அதற்கு இலக்கணம் சொல்லுதலால், பகுதியையும் விகுதியையும் பிரித்து, நடுவில் நின்றதை வினையால் அணையும்பெயர் அல்லாத பெயர்களுக்கு இடைநிலை என்று சொல்லுக.]

(உ-ம்.) அறிஞன் ............. [ஞ இடைநிலை.]
ஓதுவான் ............ [வ இடைநிலை.]
வலைச்சி .............. [ச இடைநிலை.]
வண்ணாத்தி ........... [த இடைநிலை.]



**40.** இறந்தகால இடைநிலை.

MEDIAL PARTICLES DENOTING THE PAST TENSE.

தடற ஒற் றின்னே ஐம்பால் மூவிடத்
திறந்த காலம் தருந்தொழில் இடைநிலை. [பத. சூ. 15.]

[த, ட, ற ஒற்றுகளும், இன் என்னும் இடைச்சொல்லும், ஐந்து பாலிலும், மூன்று இடத்திலும், இறந்தகாலத்தைக் குறிக்கும் வினைப்பகுபதங்களினுடைய இடைநிலைகள் ஆம்.]

(உதாரணம்.)

(1.) நட + த் + அன் + அன் = நடத்தனன் = நடந்தனன்.
(2.) கொள் + ட் + ஆன் = கொட்டான் = கொண்டான்.
(3.) நில் + ற் + ஆன் = நிற்றான் = நின்றான்.
(4.) ஓடு + இன் + ஆன் = ஓடினான்.
ஆ + கு + இன் + ஆன் = ஆகினான் = ஆனான். [இ குறைந்தது.]
விஞ்சு + இன் + அ + து = விஞ்சினது = விஞ்சியது. [ன குறைந்தது.]

**41.** நிகழ்கால இடைநிலை.

MEDIAL PARTICLES DENOTING THE PRESENT TENSE.

ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை. [பத.சூ.16.]

[ஆநின்று, கின்று, கிறு, ஆகிய இவை, ஐந்து பாலிலும், மூன்று இடத்திலும், நிகழ்காலத்தைக் குறிக்கும் வினைப் பகுபதங்களினுடைய இடைநிலைகளாம்.]

(உ-ம்.) (1.) போகாநின்றான். (2.) போகின்றான். (3.) போகிறான்.



**42.** எதிர்கால இடைநிலை.

MEDIAL PARTICLES DENOTING THE FUTURE TENSE.

பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழு
திசைவினை இடைநிலை ஆம்இவை சிலஇல.* [பத.சூ.17.]

[ப, வ, ஆகிய ஒற்றுகள், ஐந்து பாலிலும், மூன்று இடத்திலும், எதிர்காலத்தைக் குறிக்கின்ற வினைப்பகுபதங்களினுடைய இடைநிலைகளாம்.]

(உ-ம்.) (1.) உண்பான்; (2.) உண்ணுவான்.



**43.** காலங்காட்டும் விகுதிகள்.—TERMINATIONS DENOTING TENSE.

றவ்வொடு கரஉம் மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பும் எதிர்வும் டவ்வொடு
கழிவும் கவ்வோ டெதிர்வும்மின் ஏவல்
வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தம்
செல்வொடு வரவும் செய்புநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே. [பத. சூ. 18.]

---

* "இவை சில இல" என்றதற்குப் பொருள், பின்குத்திரத்தில் விளக்கப்பட்டிருக்கின்றது.

[ று, றும், து, தும், இவை இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும்; டு, டும், இவை இறந்தகாலத்தையும்; கு, கும், இவை எதிர்காலத்தையும்; மின், ஏவல்விகுதிகள், வியங்கோள்விகுதிகள், இ, மார், இவை எதிர்காலத்தையும்; ப இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும், "செய்யும்" என்னும் முற்றுவிகுதி நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும்; எதிர்மறை விகுதியாகிய ஆ மூன்றுகாலத்தையும் ஏற்றுவரும், "இவை சில இல" என்றவைகளுள்.* ]

(உதாரணம்.)

(1.) சென்று, சென்றும் [இறப்பு]; சேறு, சேறும், [எதிர்வு.]
(2.) வந்து, வந்தும் [இறப்பு]; வருது, வருதும், [எதிர்வு.]
(3.) உண்டு, உண்டும் [இறப்பு.]
(4.) உண்கு, உண்கும் [எதிர்வு.]
(5.) செய்ம்மின், செய்யாய், செய்க, சேறி, செய்ம்மார் [எதிர்வு.]
(6.) செய்ப .................... [இறப்பு, எதிர்வு.]
(7.) செய்யும் ... .............. [நிகழ்வு, எதிர்வு.]
(8.) செய்யா .................. [இறப்பு, நிகழ்வு, எதிர்வு.]

☞ இவற்றால் அன்றி, வேறுவகையாலும் காலம் தோன்றும்:—

(உ-ம்.) (1.) விட்டான், பெற்றான், புக்கான். [பகுதி விகாரத்தால் இறந்தகாலந்தோன்றியது.]
(2.) என்மனார், அறிந்திசினோர், ஆயது...... [மன், இசின், ய, இறந்தகாலம் காட்டியன.]
(3.) என்மர். ... ... .................... [ம எதிர்காலங்காட்டியது.]
(4.) உண்ணாகிடந்தான், உண்ணாவிருந்தான் [ஆகிடந்து. ஆவிருந்து நிகழ்காலம் காட்டியன.]
(5.) வருதி .......................... [இ நிகழ்காலங்காட்டியது.]

☞ மேலும், எச்சவினைகளில் பல விகுதிகள் காலங்காட்டும் எனக்கொள்க.



---

* சாரியை, சந்தி, விகாரம், ஆகிய இம்மூன்றுறுப்பையும் புணரியலில் விளக்குகிறார்.

# எழுத்ததிகாரம்.



## III - வது: உயிரீற்றுப் புணரியல்.

## OF THE COMBINATION OF VOWEL-FINALS.

### புணர்ச்சி.

**44.** அல்வழி, வேற்றுமை, இவையென்பது.

CASUAL AND INCASUAL COMBINATION.

வேற்றுமை ஐம்முதல் ஆறும் அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடைஉரி
தழுவு தொடர்அடுக் கெனஈ ரேழே. [உயிர். சூ. 2.]

[வேற்றுமைப்புணர்ச்சி ஆவது, ஐ, ஆல், கு, இன், அது, கண், எனும் ஆறு உருபும் மறைந்தாவது, வெளிப்பட்டாவது, வரப் பதங்கள் பொருந்தும் தொடர்ச்சிஆம்; அல்வழிப்புணர்ச்சி ஆவது, வினைத்தொகை முதலிய ஐந்து தொகை நிலையிலும், எழுவாய் முதலிய ஒன்பது தொகா நிலையிலும், பதங்கள் பொருந்தும் தொடர்ச்சி ஆகிய பதி னான்கும்ஆம்.]

[வேற்றுமை.]

| | வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். | | வேற்றுமைத் தொகாநிலைத்தொடர். |
|---|---|---|---|
| (உ-ம்.) | (1.) வீடுகட்டினான்.... | [ஐ] | வீட்டைக்கட்டினான். |
| | (2.) கல்எறிந்தான்..... | [ஆல்] | கல்லால் எறிந்தான். |
| | (3.) கொற்றன்மகன் .... | [கு] | கொற்றனுக்கு மகன். |
| | (4.) மலைவீழ்அருவி ..... | [இன்] | மலையின் வீழ்அருவி. |
| | (5.) சாத்தன்கை....... | [அது] | சாத்தனதுகை. |
| | (6.) மணிஒளி........, | [கண்] | மணியின் கண்ஒளி. |

## [அல்வழி.]

(உதாரணம்.)

| | | | |
|---|---|---|---|
| (1.) | கொல்யானை........ | வினைத்தொகை. | ஐந்து தொகைநிலைத் தொடர். |
| (2.) | கருங்குதிரை ...... | பண்புத்தொகை. | |
| | சாரைப்பாம்பு...... | இருபெயரொட்டுப் பண்புத்தொகை. | |
| (3.) | பிறைநுதல் ........ | உவமைத்தொகை. | |
| (4.) | இராப்பகல் ...... | உம்மைத்தொகை. | |
| (5.) | பொற்றொடி........ | அன்மொழித்தொகை. | |
| (1.) | சாத்தன்வந்தான்.... | எழுவாய்த்தொடர். | ஒன்பது தொகாநிலைத் தொடர். |
| (2.) | சாத்தாவா .......... | விளித்தொடர். | |
| (3.) | வந்தமனிதன்....... | பெயரெச்சத்தொடர். | |
| (4.) | போய்வென்றான்...... | வினையெச்சத்தொடர். | |
| (5.) | நின்றான்அவன். .... | தெரிநிலைவினைமுற்றுத் தொடர். | |
| (6.) | பெரியன்அவன் .... | குறிப்புவினைமுற்றுத் தொடர். | |
| (7.) | மற்றுவழி .......... | இடைச்சொல்தொடர். | |
| (8.) | நனிஉழைத்தான் .... | உரிச்சொல்தொடர். | |
| (9.) | பாம்புபாம்பு ...... | அடுக்குத்தொடர். | |

☞ இத்தொடர்கள் தழுவுதொடர், தழாத்தொடர், என இருவகைப்பட்டு வரும்; எப்படிஎனில்,

> "பலகற்றோம் யாம் என்று தற்புகழ வேண்டா
> அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
> சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்
> கச்சாணி அன்னதோர் சொல்." [அறநெறிச்சாரம்.]

என்பதில்,

"கைக்குடை" (=கையிலுள்ளகுடை). [வேற்றுமைத்தழாத்தொடர்.]

"உளவாம்பல" .................... [அல்வழித்தழாத்தொடர்.]

["உளவாம்" என்பது "பல" என்பதைத் தழுவாமல் "சொல்" என்பதைத் தழுவி நிற்பதால்.]

"பலகற்றோம்"....... [வேற்றுமைத்தழுவுதொடர்.]

"கற்றோம்யாம்"...... [அல்வழியில் வினைமுற்றுத் தழுவுதொடர்.]

**45.** இயல்புப்புணர்ச்சி.—NATURAL COMBINATION.

விகாரம் அனைத்தும் மேவல தியல்பே. [உயிர். சூ. 3.]

[பின்வரும் விகாரவகை எல்லாவற்றையும் அடையாதது, இயல்புப்புணர்ச்சி ஆம்.]

(உ-ம்.) பொன்மலர்.



## விகாரம்.

**46.** விகாரப்புணர்ச்சி.—MUTATIONAL COMBINATION.

தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்.
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும். [உயிர். சூ. 4.]

[எழுத்தாவது, சாரியை ஆவது, ஒன்றும் பலவும் தோன்றுதலும், திரிதலும், கெடுதலும், மேற்சொன்ன விகாரம் ஆம். இம்மூவகை விகாரமும், நிலைமொழி வருமொழிகளுடைய முதல், இடை, கடை, என்கின்ற மூன்று இடத்திலும், ஏற்றபடி வரும்.]

(உ-ம்.) (1.) மா + கனி = மாங்கனி. [ங தோன்றியது.]
மண் + கட்டி = மண்ணாங்கட்டி [ஆம் தோன்றியது.]
(2.) அல் + திணை = அஃறிணை. [மெய்கள் திரிந்தன.]
(3.) நிலம் + வலயம் = நிலவலயம். [ம கெட்டது.]



**47.** செய்யுள் விகாரம்.—POETICAL CHANGES.

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி.
[உயிர். சூ. 5.]

[பாட்டில் வேண்டுமிடத்தில், வலித்தல் முதலாகிய ஆறு விகாரங்களும் வரும்.]

( உதாரணம். )

(1) வலித்தல்...... "பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயாள்."
[ பிறக்கிட = பிறங்கிட. ] [ இராமா. 1. 8. 49. ]

(2) மெலித்தல்...... "தண்டையின் இனக்கிளி கடிவோள்."
[ தண்டை = தட்டை. ]

(3.) நீட்டல்...... "ஆளி பொங்கும் அரம்பையர் ஓதியே."
[ ஆளி = அளி = வண்டு. ] [ இராமா. 1. 15. 62. ]

(4.) குறுக்கல்..... "கோலாற் கடாஅய்க் குறினும்."
[ குறினும் = கூறினும். ] [ நாலடி. 26. 8. ]

(5.) விரித்தல்..... "வள்வார் முரசம் மதிர்மாநகர்."
[ ம விரித்தது. ] [ இராமா. 1. 4. 73. ]

(6.) தொகுத்தல்... "துன்னுத் துறத்தல் தகுவதோ?"
[ துன்னு = துன்னுமல். ] [ நாலடி. 23. 6. ]



**48.** OMISSION OF INITIALS, MEDIALS, AND FINALS, IN WORDS.

ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.
[ உயிர். சூ. 6. ]

[ ஒரு சொல்லின் முதல், இடை, கடை, ஆகிய மூன்று இடத்திலும் குறைந்துவருதலும், அச்செய்யுள் விகாரம் ஆம். ]

( உதாரணம். )

(1.) "மரைஇதழ்"....... [மரை = தாமரை.]
(2.) "ஓதிமுதுபோத்து"... [ஓதி = ஓந்தி.]
(3.) "நீல்உண்துகிலிகை" [நீல் = நீலம்.]
[மூன்று இடத்திலும் குறைதல்.]

☞ "குறைதலும்" என்ற எச்சஉம்மையால், விதி இல்லாமல் வருகிற வேறு விகாரங்களும் உண்டு எனக்கொள்க:—

(உ-ம்.) (1.) யாது = யாவது ......... [ வ தோன்றிற்று. ]
(2.) மாசி = மாசி.. ......... [ சி ஆகத்திரிந்தது. ]
(3.) யார் = ஆர் ............ [ ய் கெட்டது. ]
(4.) முழுகு = மூழ்கு ...... ... [ ஆதி நீண்டு, முவ்வில் உ கெட்டது. ]

(5.) மிஞிறு = ஞிமிறு ...
தசை = சதை ......
வைசாகி = வைகாசி ...
[எழுத்து நிலைமாறின.]

(6.) இல்வாய் = வாயில்.....
நகர்ப்புறம் = புறநகர் ....
[சொல் நிலைமாறின.]



**49.** A SINGLE COMBINATION MAY ADMIT OF MORE THAN ONE KIND OF MUTATION.

ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்.
[உயிர் சூ. 7.]

[ஒரு புணர்ச்சியில், தோன்றல், திரிதல், கெடுதல், என்னும் மூன்று விகாரங்களுள், ஒன்றுமாத்திரமல்லாமல், இரண்டும் மூன்றும் வரப்பெறும்.]

(உ-ம்.) (1.) நிலம் + பனை = நிலப்பனை. [இரண்டு விகாரம்.]
(2.) பனை + காய் = பனங்காய். [மூன்று விகாரம்.]



## பொதுப்புணர்ச்சி.

**50.** ஞ, ந, ம, ய, வ, இவைகளின் புணர்ச்சி.

THE COMBINATION OF THE INITIALS ஞ, ந, ம, ய, AND வ, WITH OTHER LETTERS.

எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரும் ஞ ந ம ய வக்கள் இயல்பும்
குறில்வழி யத்தனி ஐநொது முன்மெலி
மிகலுமாம் ண ள ன ல வழிநத் திரியும். [உயிர். சூ. 8.]

[மொழிக்குக் கடைசியில் வரக்கூடிய இருபத்துநான்கு எழுத்துகளையும் இறுதியில் உடைய சொற்களின் பின்வரும் ஞ, ந, ம, ய, வ க்கள் ஆகிய இவை அல்வழியிலும் வேற்றுமையிலும் இயல்பாம்; குற்றெழுத்தின் பின்வரும்

ய, ஐ, ஔ, து, என்பவற்றிற்குப் பின்வரும் ஞ, ந, ம (பிற சொற்களுக்கு முன் இயல்பாகிறதன்றி) மிகுந்தும் வரும்: ண, ள, ன, ல, ஆகிய இவற்றிற்குப் பின்வரும் ந, பிற ஈற்றின்முன் இயல்பாதல் அன்றி, திரியும்.]

(உதாரணம்.)

(1.) விள + ஞான்றது = விளஞான்றது .... } [இயல்பு.]
விள + ஞாற்சி = விளஞாற்சி ......

(2.) மெய் + நீண்டது = மெய்ந்நீண்டது....
மெய் + நீட்சி = மெய்ந்நீட்சி......
கை + மாண்டது = கைம்மாண்டது....
கை + மாட்சி = கைம்மாட்சி...... } [ஞ, ந, ம, மிகுந்தன.]
நொ + ஞொள்ளா = நொஞ்ஞொள்ளா...
து + மாடா = தும்மாடா.......

(3.) கண் + நன்று = கண்ணன்று...... } [ணவ்வின்பின் ந தி
கண் + நலம் = கண்ணலம்....... } ரிந்தது.]

[காட்டாத சொற்களின் பின்னும் இவ்வாறே ஒட்டிக்காண்க.]



**51.** THE COMBINATION OF THE FINALS OF EPICENE AND HIGH CASTE NOUNS WITH HARD CONSONANTS.

பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்கள் ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம் ஆவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமாம் உயர்திணை. [உயிர்.சூ.9.]

[இருதிணைகளுக்கும் பொதுவான பெயர்களுக்கும், உயர் திணைப் பெயர்களுக்கும், ஈறான மெய்கள், வல்லெழுத்தை முதலில் உள்ளமொழிகள் வந்தால், இயல்பாம். உயிர், ய, ர, என்னும் இவ்விறுதிகளை உடைய இருவகைப்பெயர்க ளின் பின் வரும் க, ச, த, ப க்கள் மிகாவாம். உயிர் ஈறும் மெய் ஈறும் ஆகிய உயர்திணைப்பெயர்களில் சில, நாற்கணங் களோடும் புணர்ந்தால், விகாரப்படுவனவும் உண்டு.]

(உதாரணம்.)

(1.) கொற்றன் / ஆண் } + { சிறிது, சிறியன், கை, செவி, தலை, புறம்........ } [இரு வழியினும் நிலைமொழி இறுதி யல்பு.]

[கொற்றன் சிறிது, கொற்றன் சிறியன்; ஆண் சிறிது, ஆண் சிறியன்; என முறையே ஒட்டிக்காண்க.]

கொற்றி / தாய் } + { குறிது, குறியள், கை, செவி, தலை, புறம்....... } [இரு வழியினும் மொழி முதல் இயல்பு.]

(2.) அவர் + குறியர், கை ..............
நம்பி + குறியன், கை ............ .... } [இரு வழியினும் வருமொழி முதல் இயல்பு.]

(3.) கபிலன் + பரணன் = கபிலபரணர்.....
வாசுதேவன் + கோட்டம் = வாசுதேவகோட்டம், வாசுதேவக்கோட்டம்........... } [இரு வழியினும் இரு மொழியும் விகாரம்.]



**52.** THE INTERROGATIVES AND VOCATIVES COMBINE NATURALLY WITH HARD CONSONANTS.

ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி இயல்பே.
[உயிர். சூ. 10.]

[ஆ, ஏ, ஓ, ஆகிய மூன்று ஈற்றுவினாவின் பின்னும், யா என்னும் வினாப்பெயரின் பின்னும், விளிப்பெயர்களின் பின்னும், வரும் வல்லினம் இயல்பாம்.]

(உ-ம்.) (1.) நம்பியா கொண்டான், சென்றான், போனான்; யாகுறியன, சிறியன. } [வினாவின்பின், வல்லினம் இயல்பாதல்.]

(2.) நம்பீகொள், செல், தா, போ..... } [விளியின்பின், வலி இயல்பாதல்.]



**53.** THE COMBINATION OF HARD CONSONANTS WITH THE SECOND PERSON OF VERBS AND WITH IMPERATIVES ENDING IN VOWELS, OR IN ய, ர, AND ழ.

ஆவி யரழ இறுதிமுன் னிலைவினை
ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே.
[உயிர். சூ. 11.]

[உயிரையும், ய, ர, ழ, ஆகிய இம்மூன்றொற்றையும், இறுதியில் உடைய முன்னிலை வினையின் பின்னும், ஏவல் வினையின் பின்னும், வரும் வல்லினம் இயல்பும் விகற்பமும் ஆம்.]

(உதாரணம்.)

(1.) உண்டனை + கொற்றா = உண்டனைகொற்றா....
செய்தாய் + சாத்தா = செய்தாய் சாத்தா....
போனீர் + தேவரே = போனீர்தேவரே.......
வாழ் + பூதா = வாழ்பூதா........... } [இயல்பு.]

(2.) நட + கொற்றா = நடகொற்றா, நடக்கொற்றா..
எய் + கொற்றா = எய்கொற்றா, எய்க்கொற்றா. } [விகற்பம்.]

☞ ழ முன்னிலையில் வராது.

———»»««———

## உயிரீற்றுச் சிறப்புப்புணர்ச்சி.

**54.** உயிரின்பின் உயிர் புணரும் வகை.—THE COMBINATION OF VOWELS WITH VOWELS.

இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்.
[உயிர். சூ. 12.]

[இ, ஈ, ஐ, ஆகிய இவைகளின்பின் யகரமும், மற்ற ஏழு உயிர்களின்பின் வகரமும், ஏயின்பின் ய, வ, இரண்டும், உயிரை முதலில் உடைய மொழிவந்தால், உடம்படுமெய் என்று வரும்.]

(உதாரணம்.)

(1.) மணி + அழகு = மணியழகு........
நீ + இருந்தாய் = நீயிருந்தாய்.. ....
பனை + ஓலை = பனையோலை....... } [ய தோன்றிற்று.]

(2.) பூ + அழகிது = பூவழகிது .......... [வ தோன்றிற்று.]

(3.) சே ( = எருது) + ஓடிற்று = சேவோடிற்று } [வ, ய, இரண்டும்
நீயே + அறிவாய் = நீயேயறிவாய் ........ } தோன்றின.]

.... ...., .... .... .... வீரற்"
"சேவெலாம் காட்டுகின்ற." [இரா. 1. 17. 15.]

[ஏ ( = அம்பு) + எலாம் = ஏ வெலாம்.]

☞ "ஏனை உயிர்வழிவவ்வும்" என்று சொல்லியிருந்தாலும் உரி யின்பின் அருமையாய் யகரமொற்றுத் தோன்றுதலை "இடை யுரிவடசொலின்" என்ற சூத்திரத்திற் கொள்க:

(உ-ம்.) "மாயிரு ஞாலம் உண்டோன்." [இரா. 1. 6. 24.]

[மா + இரு = மாயிரு.]



**55.** THE COMBINATION OF THE INTERROGATIVE எ AND THE DEMONSTRATIVES WITH OTHER LETTERS.

[EXCEPTION TO 54, AND 50.]

எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கில் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே. [உயிர். சூ. 13.]

[எ என்னும் வினா இடைச்சொல்லின் பின்னும், அ, இ, உ, என்னும் மூன்று சுட்டிடைச்சொல்லின் பின்னும், உயி ரும் யவ்வும்வந்தால், வவ்வும், யகரம் அல்லாத மற்ற மெய்கள் வந்தால், அம்மெய்களும், செய்யுளில் சுட்டு நீண்டுவந்தால், யவ்வும், மிகுதல் முறைஆம்.]

(உ-ம்.) (1.) எ + அணி = எவ்வணி; அ + யாழ் = அவ்யாழ்.
(2.) இ + மலை = இம்மலை; உ + குடம் = உக்குடம்.
(3.) ஆ ( = அ = அந்த) + இடை ( = இடம்) = ஆயிடை

"ஆயிடைப் பருவம்வந் தடைந்த எல்லையின்" [இரா. 1. 6. 101.]

☞ "நெறி" என்றதனால் பின்வருவனவும் அமையும் எனக்கொள்க:—

(1.) யாங்ஙனம்... ...................... [யா வினாவின்பின் ங மிகுந்தது.]

(2.) ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம்... [நீண்ட சுட்டின்பின் ங மிகுந்தது.]

(3.) ஈது, ஆங்கு, ஈங்கு, ஊங்கு, ஆண்டு, ஈண்டு ...................... } [சுட்டுப்பெயர் நீண்டது.]

(4.) "செல்வுழிச்செல்க.". ......... } [லவ்வின் பின் உடம்படுமெய் அல்லாத வ தோன்றிற்று ]



**56.** FINAL உ DROPPED BEFORE VOWELS, AND CHANGED INTO இ BEFORE ய. [EXCEPTION TO 54.]

உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யாம் முற்றும்அற் றொரோவழி.
[உயிர். சூ. 14.]

[குற்றியல் உகரம், உயிரை முதலில் உள்ள மொழிவந்தால், தனக்காதாரமாகிய மெய்யைவிட்டுக் கெடும்; யவ்வை முதலில் உள்ள மொழிவந்தால், இகரம்ஆகத் திரியும்; முற்றியல் உவ்வும் அவ்விரண்டு விதியையும் சில இடங்களில் பெறும்.]

(உதாரணம்.)

(1.) நாகு + அருமை=நாகருமை. [குற்றியல் உ கெட்டது.]
கொக்கு + யாது=கொக்கியாது. [குற்றியல் உகரம் இ ஆனது.]

(2.) அறிவு + அரிது = அறிவரிது. [முற்றியல் உ கெட்டது.]
அறிவு + யாப்பு=அறிவியாப்பு.[முற்றியல் உகரம் இ ஆனது.]

☞ "அழைப்பதுவே" = அழைப்பது + ஏ; இதில் குற்றியல் உ கெடாமல் வ தோன்றியது காண்க.

[கெடும் என்னுமல் "ஓடும்" என்றதால் இது அமையும் ]



## உயிரீற்றின்பின் வல்லினம் புணர்வது.

---

**57.** க, ச, த, ப, இரட்டிப்பது.—THE LETTERS க, ச, த, AND ப, DOUBLED AFTER VOWELS.

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும்வித வாதன மன்னே. [உயிர். சூ. 51.]

[இயல்பினாலும் விதியினாலும் இறுதிஆகநின்ற உயிர்களின் பின்வரும் க, ச, த, ப, பெரும்பாலும் மிகும், சிறப்புவிதியிற் சொல்லாதவைகள்.]

(உ-ம்.) இந்தப்படம், வரச்சொன்னான், மரப்பலகை.



**58.** சில அகரஇற்றுச் சொற்களின்பின் க, ச, த, ப க்கள் புணரும் வகை.—THE COMBINATION OF CERTAIN WORDS ENDING IN அ WITH க, ச, த, AND ப. [EXCEPTION TO 57.]

செய்யிய என்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரின் எச்சமுற் றாறன் உருபே
அஃறிணைப் பன்மை அம்மமுன் இயல்பே.

[உயிர். சூ. 17.]

["செய்யிய" முதலிய அகரஈற்றுச் சொற்களின் பின்வரும் வல்லினம் இயல்பாம்.]

(உதாரணம்.)

(1.) உண்ணியகொண்டான். [வினை எச்சத்தின்பின் இயல்பு.]

(2.) வந்தகுதிரை.........
சித்திரித்தசேதா.....
} [பெயர் எச்சத்தின்பின் இயல்பு.]

(3.) பொன்போன்றன நகர்கள்; சான்றன பறவைகள்.............
} [வினைமுற்றின்பின் இயல்பு.]

(4.) தனதாள்கள்.......... [ஆறன் உருபின்பின் இயல்பு.]

(5.) பலசொற்கள் ........ [அஃறிணைப்பன்மையின்பின்இயல்பு.]

(6.) அம்ம! கொற்றா...... [அம்மவின்பின் இயல்பு.]

[உயிர். சூ. 17.]

☞ சிறப்புவிதிகளில் க, ச, த, ப, இயல்பாயும் விகற்பமாயும் வரும் எனச்சொன்ன வேறு சிலவற்றிற்கு உதாரணம்:—

(1) பலபல, பற்பல; சிலசில, சிற்சில,
பல + சாலை = பலசாலை, பல்சாலை;
சில + யானை = சிலயானை, சில்யானை.
[பலப்பல, சிலச்சில என்றும் வரும்.]

[உயிர். சூ. 20.]

(2.) ஆ + குறிது = ஆகுறிது; மா + குறிது = மாகுறிது; கேண்மியா + கொற்றா = கேண்மியாகொற்றா. ... [சில ஆ ஈற்றின்பின் இயல்பு.]

(3 ) உண்ணா + குதிரைகள் = உண்ணாகுதிரைகள் ... ... [எதிர்மறை வினைமுற்று.]

[உயிர். சூ. 21.]

(4.) யானை + குறிது = யானைகுறிது................... [ஐ யின்பின் இயல்பு.]

(5.) கிளி + குறிது = { கிளிகுறிது.................. / கிளிக்குறிது................ } [இ காரத்தின்பின் விகற்பம்.]

(6.) திணை + குறிது = { திணைகுறிது................ / திணைக்குறிது.............. } [ஐ யின்பின் விகற்பம்.]

[உயிர். சூ. 26.]

(7.) பீ + குறிது = பீகுறிது........................
 ஈ + குறியை = ஈகுறியை........................
 மீ + கண் = மீகண்........................ } [பீ, ஈ, மீ யின்பின் இயல்பு.] [மீ = மேல்.]

[உயிர். சூ 28.]



## உகரஈற்றுட் சிலவற்றின்பின் வல்லினம் புணர்வது.

**59.** சில உகரஇற்றுச் சொற்களோடு க, ச, த, பக்கள் புணரும் வகை.—THE COMBINATION OF CERTAIN WORDS ENDING IN உ WITH க, ச, த, AND ப. [EXCEPTION TO 57.]

மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகும்உகர முன்னர் இயல்பாம். [உயிர். சூ. 29.]

[உகரஈற்று மூன்றாம் உருபு முதலியவற்றின்பின், வல்லினம் இயல்பாய் வரும்.]

( உதாரணம். )

(1.) அவனொடுபோ .... [உ இற்று மூன்றாம் உருபின்பின் இயல்பு.]

(2.) சாத்தனதுதலை .... [உ இற்று ஆறாம் உருபின்பின் இயல்பு.]

(3.) ஒருகை, இருசெவி. [எண்களின்பின் இயல்பு.]

(4.) வருபுனல், தருசோறு........ [வினைத்தொகையின்பின் இயல்பு.]

(5.) அதுகுறிது ... ..... [அல்வழியில், சுட்டின்பின் இயல்பு.]

(6.) இதுபொறுத்தான் ... [வேற்றுமையில், சுட்டின்பின் இயல்பு.]

**60.** THE COMBINATION OF CERTAIN WORDS ENDING IN SHORTENED உ WITH க, ச, த, AND ப. [EXCEPTION TO 57.]

வன்றொடர் அல்லன முன்மிகா அல்வழி.

[உயிர். சூ. 31.]

[வன்றொடர் அல்லாத மற்றைத் தொடர்களின்பின் அல்வழியில் வருகிற வல்லினம் இயல்பாம்.]

(உதாரணம்.)

(1) நாகுகடிது. [நெடிற்றொடர்க்குற்றியல் உவ்வின்பின் இயல்பு.]

[மற்றைத் தொடர்களின் பின்னும் அல்வழியில் மிகாமை ஆராய்ந்துணர்க.]



**61.** [EXCEPTION TO 57.]

இடைத்தொடர் ஆய்தத் தொடர்ஒற் றிடையின்
மிகாநெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

[உயிர். சூ. 32.]

[இடைத்தொடர், ஆய்தத்தொடர், ஒற்றிடையில் மிகாத நெடிற்றொடர், உயிர்த்தொடர், ஆகிய இவற்றின்பின், வேற்றுமைவழியில் வல்லினம் இயல்பாய் வரும்.]

(உதாரணம்.)

(1.) நாகுகடுமை....... { ஒற்று இடையில்மிகாத நெடிற்றொடரின் பின், வேற்றுமையில் இயல்பு. }

வரகுகதிர்.... [சாரியைபெறுமல் உயிர்த்தொடரில் இயல்பு.]

[இடை எழுத்தும் ஆய்தமும் தொடர்ந்த குற்றியல் உவ்வின் பின் மிகாமை ஆராய்ந்து கொள்க.]



**62.** SHORTENED உ IN டு AND று PRECEDED BY LONG OR SHORT VOWELS. [EXCEPTION TO 57.]

நெடிலொ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

[உயி. சூ. 33.]

[நெடில்தொடர், உயிர்த்தொடர், ஆகிய குற்றியல் உகரங்களையுடைய மொழிகளுள், அந்த உகரம் ஏறி நிற்கும் ட, ற, வேற்றுமையில் பெரும்பாலும் இரட்டிக்கும்.]

(உ-ம்.) (1.) ஆடு + கால் = ஆட்டுக்கால் ... } [நெடில் தொடரில்
நீறு + பை = நீற்றுப்பை ..... } ட, ற, இரட்டின.]

(2.) முருடு + கால் = முருட்டுக்கால் } [உயிர்த் தொடரில்
கயிறு + முடி = கயிற்றுமுடி.... } ட, ற, இரட்டின.]

☞ "மிகவே" என்றதனால், பின்வருபவைகளும் அமையும்:—

(உ-ம்.) (1.) "காவிரி புரக்கும் நாடுகிழ வோனே." [வேற்றுமையில் இரட்டாமை]

(2.) காடு + அரண் = காட்டரண்...... } [அல்வழியில் இரட்டின.]
களிறு + யானை = களிற்றியானை ..... }

(3.) வெருகு + கண் = வெருக்குக்கண்.... } [இருவழியிலும் வேறு ஒற்று
எருது + மாடு = எருத்துமாடு........ } இரட்டின.]



**63.** வல்லினம் மெல்லினம் ஆதல்.—SOME SOFT CONSONANTS ARE CHANGED INTO HARD CONSONANTS. [EXCEPTION TO 57.]

மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொடர் ஆகா மன்னே. [உயிர். சூ. 34.]

[மென்றொடர்க் குற்றியல் உகரமொழிகளிற் சில மொழிகள், வேற்றுமை வழியில், தமக்கினமான வன்றொடராதலை யொழிந்தன பெரும்பாலன.]

[மென்றொடரில் சில வன்றொடராம், பல ஆகாவாம் என்பது கருத்து.]

(உ-ம்.) மருந்து + பை = மருத்துப்பை } [மெல்லினம் வல்
இரும்பு + தூண் = இருப்புத்தூண் } லினமானது.]
கன்று + ஆ = கற்று }

"குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு மாண்பே." [நீதிநெறி. 29.]

☞ "மன்" என்றதாற் பின்வருவதையுங்கொள்க:

அன்பு + தளை = அற்புத்தளை......... [அல்வழியில் அருகிவன்றொடராதல்.]



# எழுத்ததிகாரம்.



## IV-வது: மெய்ஈற்றுப் புணரியல்.

## OF THE COMBINATION OF CONSONANT-FINALS.



### மெய்யீற்றுச் சிறப்புப்புணர்ச்சி.



**64.** THE COMBINATION OF VOWELS WITH CONSONANTS.
[GENERAL RULE.]

*உடல்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே.* [மெய். சூ. 1.]

*[நிலைமொழி இறுதியில் நின்ற மெய்யின்மேல், வருமொழி முதலில்நின்ற உயிர்வந்துசேர்ந்து நடப்பது, இயல்புப் புணர்ச்சியாம்.]*

*(உ-ம்.) அவன்+அழகன்=அவனழகன்.*



**65.** CONSONANTS AFTER SINGLE SHORT LETTERS.
[EXCEPTION TO 64.]

*தனிக்குறில் முன்னொற் றுயிர்வரின் இரட்டும்.*
[மெய். சூ. 2.]

*[தனிக் குற்றெழுத்தின் பின்நின்ற ஒற்றானது, உயிர்வந்தால், இரட்டித்து நிற்கும்.]*

*(உ-ம்.) பொன்+அழகு=பொன்னழகு.... [ன இரட்டியது.]*

### 66. ணகர, னகர, இற்றுச்சொற்களின் புணர்ச்சி.

THE COMBINATION OF ண, ன FINALS WITH CONSONANTS.

ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினும் இயல்பா கும்மே. [மெய். சூ. 6.]

[ண, ன, என்னும் மெய்கள் வேற்றுமையில் வல்லினம் வந்தால், முறையே ட, ற, ஒற்றுகள் ஆம்; மெல்லினமும், இடையினமும் வந்தால், இயல்பாம். அல்வழியில் எவ்வகை மெய் வந்தாலும், இயல்பே ஆம்.]

(உதாரணம்.)

(1.) மண் + பகைஞன் = மட்பகைஞன்...
சிறுகண் + களிறு = சிறுகட்களிறு....
பொன் + பலகை = பொற்பலகை.. } [வேற்றுமையில் திரிபு.]

(2.) கண் + மென்மை = கண்மென்மை..
பொன் + வலிமை = பொன்வலிமை. } [வேற்றுமையில் இயல்பு.]

(3.) விண் + குறிது = விண்குறிது......
கண் + மெலிது = கண்மெலிது....
பொன் + வலிது = பொன்வலிது.... } [அல்வழியில் இயல்பு.]



### 67. ண, ன, இற்றுப்புணர்ச்சி.—ண AND ன, NOT OCCURRING AFTER SINGLE SHORT LETTERS, DROPPED BEFORE ந.

குறில்அணை வில்லா ணனக்கள் வந்த
நகரம் திரிந்துழி நண்ணும் கேடே. [மெய். சூ 7.]

[தனிக்குறில் ஒன்றுதவிர, ஒரு மொழி, தொடர்மொழிகளைச் சார்ந்த ண, ன, ஆனவை வருமொழிக்கு முதலில் வந்த ந, மயக்க விதி இல்லாததினால், திரிந்த இடத்தில் கெடும்.]

(உதாரணம்.)

தூண் + நன்று = தூணன்று......... } [நெடிலின் பின்.]
தூண் + நன்மை = தூணன்மை...... }

அரசன் + நல்லன் = அரசனல்லன்..... } [பல குறிலின் பின்.]
அரசன் + நன்மை = அரசனன்மை..... }

பசுமண் + நன்று = பசுமணன்று...... } [தொடர்மொழியி ன்பின்.]
செம்பொன் + நன்மை = செம்பொனன்மை. }



## 68. மவ்வீற்றுப் புணர்ச்சி.

ம FINALS UNITE WITH ALL INITIALS. [GENERAL RULE.]

*மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்*
*வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்.* [மெய். சு. 16.]

[மவ்வீற்றுச் சொற்கள் இறுதியில் உள்ள மகர ஒற்று கெட, உயிர் ஈறுபோல் புணர்வனவும், வல்லினம் வந்தால், கெடாமல் அவற்றிற்கு இனமாகத் திரிவனவும்ஆம்.]

பொதுவாய்ச் சொன்னதனால் அல்வழி, வேற்றுமை, இரண்டிற்கும் இவ்விலக்கணம் அமையும்.

(உ-ம்.) (1.) வட்டம் + ஆழி = வட்டவாழி.... }
வட்டம் + கடல் = வட்டக்கடல்... } [அல்வழி.]
வட்டம் + நேமி = வட்டநேமி.... }
வட்டம் + வாரி = வட்டவாரி.... }

(2.) மரம் + அடி = மரவடி......... }
மரம் + கால் = மரக்கால்....... } [வேற்றுமை வழி.]
மரம் + நார் = மரநார்......... }
மரம் + வேர் = மரவேர்....... }
நாம் + கடியம் = நாங்கடியம்...... [அல்வழி.]
நம் + கை = நங்கை......... [வேற்.வழி.]

☞ "இனமாத்திரிபவும் ஆகும்" என்றதனால்,

நாம் + பெரியம் = நாம்பெரியம் எனப் பல்லின்முன் திரியாமை கொள்க.

**69.** ய, ர, ழ, இற்றுப்புணர்ச்சி.

THE COMBINATION OF ய, ர, ழ FINALS WITH க, ச, த, AND ப.

யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பும் மிகலும் ஆகும் வேற்றுமை
மிகலும் இனத்தோ டுறழ்தலும் விதிமேல். [மெய்.சூ.21.]

[ய, ர, ழ, ஆகிய மூன்று ஈற்றின் பின்னும், க, ச, த, ப க்கள் வந்தால் அல்வழியில் இயல்பாதலும், மிகுதலும், வேற்றுமையில் மிகுதலும், வல்லினமாவது மெல்லினமாவது மிகுதலும், விதிஆம்.]

(உ–ம்.) (1.) வேய் + கடிது = வேய்கடிது ....
வேர் + சிறிது = வேர்சிறிது .....
வீழ் + பெரிது = வீழ்பெரிது .... } [அல்வழியில் இயல்பு.]

(2.) மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி ...
கார் + பருவம் = கார்ப்பருவம் ...
பூழ் + பறவை = பூழ்ப்பறவை ... } [அல்வழியில் மிகுதல்.]

(3.) நாய் + கால் = நாய்க்கால் ....
தேர் + கால் = தேர்க்கால் ....
பூழ் + கால் = பூழ்க்கால் ..... } [வேற்றுமையில் மிகுதல்.]

(4.) வேய் + குழல் = வேய்ங்குழல்,
வேய்க்குழல் ..................
ஆர் + கோடு = ஆர்ங்கோடு,
ஆர்க்கோடு .... ........ ...... } [வேற்றுமையில் ங, க, மிகல்.]

ல, ள, ஈற்றுப்புணர்ச்சி.

**70.** ல, ள, இறு ற, ட உம் ன, ண உம் ஆதல்.

ல AND ள CHANGED INTO ற AND ட, ALSO INTO ன AND ண.

லள வேற் றுமையில் றடவும் அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரின் ஆம்மெலி
மேவி னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப. [மெய். சூ. 24.]

[ல, ள, ஆகிய இரண்டு ஈறும் வல்லினம் வந்தால் வேற்றுமையில் முறையே ற, ட, ஆம்; அல்வழியில் ற, ட, ஆகாமையும் ஆதலும்ஆம்; இரண்டுவழியிலும் மெல்லினம் வந்தால் ன, ண, ஆம்; இடைஇனம் வந்தால் இயல்பு ஆம் என்று சொல்லுவர் புலவர்.]

(உதாரணம்.)

(1.) கல் + குறை = கற்குறை...... [வேற்றுமையில் றவ்வானது.]
முள் + குறை = முட்குறை... [வேற்றுமையில் டவ்வானது.]

(2.) கல் + குறிது = கல்குறிது, கற்குறிது.. } [அல்வழியில் உறழ்வு.]

முள் + சிறிது = முள்சிறிது, முட்சிறிது } [அல்வழியில் உறழ்வு.]

(3.) கல் + முனை = கன்முனை ..... [வேற்றுமையில் மவ்வர, னவ்வானது.]

முள் + முனை = முண்முனை... [வேற்றுமையில் மவ்வர, ணவ்வானது.]

(4.) கல் + மலிந்தது = கன்மலிந்தது. [அல்வழியில் மவ்வர, னவ்வானது.]

முள் + முறிந்தது = முண்முறிந்தது ... } [அல்வழியில் மவ்வர, ணவ்வானது.]

(5.) கல் + யாது = கல்யாது .... [அல்வழியில் யவ்வர, இயல்பு.]

கல் + யாப்பு = கல்யாப்பு..... [வேற்றுமையில் யவ்வர, இயல்பு.]



**71.** த, ந, முன்னும் வல்லினத்தின் முன்னும் நின்ற ல, ள.

ல AND ள BEFORE த, ந, AND HARD CONSONANTS.

குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரம் திரிந்தபின் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்பும் திரிபும் ஆவன உளபிற. [மெய் சூ. 26.]

[தனிக்குறில் அல்லாத மற்றை எழுத்துகளைச் சார்ந்துவரும் ல, ள, ஆனவை, அல்வழியில் வந்த தகரம் திரிந்த இடத்தில்

கெடுதலும், இருவழியிலும் வந்த நகரந் திரியுமிடத்தில் கெடுதலும், வல்லினம்வந்தால் அல்வழியில் உறழாமல் இயல் பாதலும், திரிதலும், வேற்றுமையில் திரியாமல் இயல்பாத லும், உண்டு.]

(உதாரணம்.)

(1.) ஆல் + தீது = ஆதீது ...... [அல்வழியில் ல கெட்டது.]
வாள் + தீது = வாடீது...... [அல்வழியில் ள கெட்டது.]

(2.) ஆல் + நன்று = ஆனன்று .... [அல்வழியில் ல கெட்டது.]
வாள் + நன்று = வாணன்று.... [அல்வழியில் ள கெட்டது.]

(3.) ஆல் + நன்மை = ஆனன்மை.... [வேற்றுமையில் ல கெட்டது.]
வாள் + நன்மை = வாணன்மை. [வேற்றுமையில் ள கெட்டது.]

(4.) கால் + கடிது = கால்கடிது ... [லவ்வின்பின் கவ்வர, இயல்பு.]
தேள் + சிறிது = தேள்சிறிது... [ளவ்வின்பின் சவ்வர, இயல்பு.]

(5.) வேல் + படை = வேற்படை.
வாள் + படை = வாட்படை.
[லவ்வின் பின்னும் ளவ்வின்பின் னும் பவ்வரத், திரிபு. இவை அல்வழி.]

(6.) கால்குதித்தோடியது.........
வாள்போழ்ந்திட்டமறவர்......
[வேற்றுமையில் இயல்பு.]



**72.** த AND ந AFTER ன, ல, ண, AND ள, CHANGED INTO ற, ன, AND ட, ண, RESPECTIVELY.

னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ஆயும் காலே. [மெய். சூ. 34.]

[ன, ல, ஆகிய மெய்களின் பின்வரும் தவ்வானது றவ் வாம்; அவற்றின் பின்வரும் நவ்வானது னவ்வாம்; ண, ள, ஆகிய மெய்களின் பின்வரும் தவ்வானது டவ்வாம்; அவற் றின் பின்வரும் நவ்வானது ணவ்வாம், ஆராயுங்காலத் தில்.]

(உதாரணம்.)

(1.) பொன் + தீது, நன்று = பொன்றீது, பொன்னன்று. [த், ந்.]
கல் + தீது, நன்று = கற்றீது, கன்னன்று...... [த், ந்.]

(2.) மண் + தீது, நன்று = மண்டீது, மண்ணன்று.... [த், ந்.]
முள் + தீது, நன்று = முட்டீது, முண்ணன்று... [த், ந்.]

[வேற்றுமையிலும் உதாரணம் இவ்வாறே அமைத்துக்கொள்க.]



**73.** ஒரு புறனடை.—A REMARK.

இடை உரி வடசொலின் இயம்பிய கொளாதவும்
போலியும் மரூஉம் பொருந்திய ஆற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே.
[மெய். சூ. 36.]

[இடை, உரி, வடசொல், ஆகிய இவற்றுள் உயிர்ஈற்றுப் புணரியலிலும், மெய்ஈற்றுப் புணரியலிலும் தோன்றல், திரிதல், கெடுதல், இயல்பு, என்று சொல்லிய புணர்ச்சி இலக்கணங்கள் பொருந்தாமல் வேறுபட்டுவருவனவும், இலக்கணப் போலி மொழிகளும், மரூஉமொழிகளும், இருவகை வழக்கினும் நடக்கின்ற முறைமைக்கு இணங்கும்படி புணர்த்தல், அறிவுடையோர் எல்லார்க்கும் முறைமை.]

(உதாரணம்.)

(1.) ஆ + ன் + கன்று = ஆன்கன்று....
வண்டு + இன் + கால் = வண்டின்கால்.
} வேற்றுமைப் புணர்ச்சியில் சாரியை இயல்பாயின.

(2.) மழ + களிறு = மழகளிறு.....
} அகரஇற்றுஉரிச்சொல்லின்பின் வல்லினம் இயல்பானது.

(3.) ஆதி + பகவன் = ஆதிபகவன்;
கங்கா + சேனை = கங்காசேனை.

[நிலைவரு மொழிகளிரண்டும் வடசொல்லாதலின், உயிர்ஈற்றின்பின் வல்லெழுத்து இயல்பாயின. போலிமுதலியவற்றிற்கு உதாரணம் மேலதிகாரத்தில் காண்க.]

☞ இச்சூத்திரத்தினால், தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி, ஆகிய இவைகளும் அமையும்:*

## I. தீர்க்கசந்தி.

(1.) அ, ஆ வின்பின் அ, ஆ, வந்தால், இரண்டுங்கெட, ஆ தோன்றும்:—

(உ-ம்.) (1.) குண + அநுபவம் = குணாநுபவம்.
(2.) ஞான + ஆகரன் = ஞானாகரன்.
(3.) தாரா + அதீசன் = தாராதீசன் (= சந்திரன்.)
(4.) தயா + ஆகரன் = தயாகரன்.

(2.) இ, ஈ யின்பின் இ, ஈ, வந்தால், இரண்டுங்கெட, ஈ தோன்றும்:—

(உ-ம்.) (1.) கரி + இந்திரன் = கரீந்திரன்.
(2.) பூமி + ஈசன் = பூமீசன்.
(3.) பிருதிவி + இந்திரன் = பிருதிவீந்திரன்.
(4.) கௌரீ + ஈசன் = கௌரீசன் (= சிவன்.)

(3.) உ, ஊ வின்பின் உ, ஊ, வந்தால், இரண்டுங்கெட, ஊ தோன்றும்:—

(உ-ம்.) (1.) அணு + உற்பத்தி = அணூற்பத்தி.
(2.) குரு + ஊகம் = குரூகம்.
(3.) சயம்பூ + உபாயம் = சயம்பூபாயம்
(4.) சயம்பூ + ஊகம் = சயம்பூகம்.

## II. குணசந்தி.

(1.) அ, ஆ வின்பின் இ, ஈ, வந்தால், இரண்டுங்கெட, ஏ தோன்றும்:—

(உ-ம்.) (1.) சர்வ + இந்தனம் (= விறகு) = சர்வேந்தனம்.
(2.) நர + ஈசுவரன் = நரேசுவரன்.
(3.) மகா + ஈசுவரன் = மகேசுவரன்.
(4.) ரமா + ஈசன் = ரமேசன் (= விஷ்ணு.)

[ரமா = இலட்சுமி.]

---

* நிலைமொழி ஈறும், வருமொழி முதலும், பொருந்துவதே சந்தி எனப்படுவது; அப்படியன்றித், தசரதன் புத்திரன் எனவும், விஷ்ணுவைத் தொழுவோன் எனவும், வீரத்தின் தன்மை எனவும், முறையே பொருள்தந்து நிற்குந் தனிமொழிகளாகிய தாசரதி, வைஷ்ணவன், வீரியம், முதலியவற்றை, "ஆதிவிருத்திசந்தி" என்று மயங்கிக் கூறுவாரும் உளர். இவ்வாறு வருதலை வடநூலார் "தத்திதம்" என்பர். இதன் திறம் பிரயோகவிவேகத்தில் விளங்கக்காண்க.

(2.) அ, ஆ வின்பின் உ, ஊ, வந்தால், இரண்டுங்கெட, ஓ தோன்றும்:—

(உ-ம்.) (1.) பாத + உதகம் = பாதோதகம்.
(2.) ஞான + ஊகம் = ஞானோகம்.
(3.) தரா + உதயம் = தரோதயம்.
(4.) தரா + ஊர்ச்சிதன் = தரோர்ச்சிதன்.

## III. விருத்திசந்தி.

(1.) அ, ஆ வின்பின் ஏ, ஐ, வந்தால், இரண்டுங்கெட, ஐ தோன்றும்:—

(உ-ம்.) (1.) குண + ஏகத்துவம் = குணைகத்துவம்.
(2.) குண + ஐசுவரியம் = குணைசுவரியம்.
(3.) லோக + ஏகநாதன் = லோகைகநாதன்.
(4.) மகா + ஐக்கியம் = மகைக்கியம்.

(2.) அ, ஆ வின்பின் ஓ, ஔ, வந்தால், இரண்டுங்கெட, ஔ தோன்றும்:—

(உ-ம்.) (1.) வர (= மேலான) + ஓடதி = வௌடதி.
(2.) வர + ஔடதம் = வௌடதம்.
(3.) தரா + ஓடதி = தௌடதி.
(4.) தேவதா + ஔடதம் = தேவௌடதம்.



# எழுத்ததிகாரம்.



## V-வது: உருபுப்புணரியல்.

## COMBINATION OF CASUAL TERMINATIONS.

### உருபுகள்.

**74.** POSITION AND USE OF CASUAL TERMINATIONS.

*பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே.*
[ உருபு. சூ. 2. ]

[*வேற்றுமை உருபுகள் தம்பொருளைத் தரப்பெயர்க்குப் பின்வரும்.*]

(*உ-ம்.*) *மணி அடித்தான்* ................ [*மணியை.*]

**75.** *இவ்வுருபுகள் பெயர்களோடு புணர்தல்.*

THEIR COMBINATION WITH NOUNS.

*ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்*
*ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.*
[ உருபு. சூ. 3. ]

[*முதலிலும் ஈற்றிலும் மெய்யையும் உயிரையும் உடைய வேற்றுமை உருபுகள் ஆறும் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும்பொழுது, வேற்றுமைப்புணர்ச்சியில் இயல்பொடு விகாரமாய்ப் புணர்ந்த ஒற்றுயிர் முதலீற்றுப்பெயர்களைப் பெரும்பாலும் ஒத்துவரும்.*]

(உதாரணம்.)

(1.) நம்பி + கண் (உருபு) + வாழ்வு = நம்பிகண் வாழ்வு.

[51-ம் சூத்திரத்தின்படி முதலும், 66-ம் சூத்திரத்தின்படி ஈறும், "கண்" உருபு இயல்பாயிற்று.]

(2.) உறி + கண் (உருபு) + தயிர் = உறிக்கட்டயிர்.

[57-ம் சூத்திரத்தின்படி முதலும், 66-ம் சூத்திரத்தின்படி ஈறும், "கண்" உருபு விகாரப்பட்டது.

(3.) பழி + கு (உருபு) + அஞ்சி = பழிக்கஞ்சி.

[57-ம், 56-ம் சூத்திரங்களின்படி குவ்வுருபு விகாரப்பட்டது.]

(4.) "வெற்றுரைக்குண்டோர் வலியுடைமை." [நீதிநெறி. 21.]

[உரை + கு + உண்டு = உரைக்குண்டு.]



**76.** சாரியை வருதலும், வராமையும், விகற்பமும்.—EUPHONIC INCREMENTS MAY OR MAY NOT OCCUR.

பதம்முன் விகுதியும் பதமும் உருபும்
புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை
வருதலும் தவிர்தலும் விகற்பமும் ஆகும். [உருபு. சூ. 4.]

[பதத்தின்பின், விகுதி ஆவது, பதம் ஆவது, உருபு ஆவது, புணரும்போது, சாரியை ஒன்று ஆயினும் பல ஆயினும், வருதலும், வராமையும், இவ்விரண்டும் ஆகிய விகற்பமும் ஆகும்.]

(உதாரணம்.)

(1.) சென்றனன் ...... [சாரியை வந்தது.]
சென்றான் ........ [சாரியை வரவில்லை.]
சென்றன, சென்ற.. [விகற்பம்.]
} [விகுதிப் புணர்ச்சியில்.]

(2.) புளியங்காய் ...... [சாரியை வந்தது.]
புளிக்கறி ........ [சாரியைவரவில்லை.]
நெல்லின்குப்பை } நெற்குப்பை .... } [விகற்பம்.]
} [பதப் புணர்ச்சியில்.]

(3.) அவற்றை.......... [சாரியை வந்தது.]
தன்னை............ [சாரியைவரவில்லை.] [உருபுப் புணர்ச்சியில்.]
ஆனை, ஆவை...... [விகற்பம்.]

(4.) ஆவினுக்கு........ [பலசாரியை வந்தன.]

சாரியை.

**77.** THE SEVENTEEN GENERAL INCREMENTS.

அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்
தம் நம் நும் ஏ அ உ ஐ குன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே. [உருபு. சூ. 5.]

[அன், ஆன், முதலிய பதினேழும், இவைபோல்வன பிறவும், விகுதி, பதம், உருபு, என்னும் மூன்று புணர்ச்சியிலும், தனிமொழிகளிலும், வருகிறதினால், பொதுச்சாரியை ஆகும்.]

பெயர்கள் வேற்றுமை உருபு புணரும்போது வரும்விதம்.

**78.** "எல்லாம்" என்னும் மொழி வேற்றுமை உருபு புணரும் போது வரும்விதம்.—THE WORD எல்லாம் HOW DECLINED.

எல்லாம் என்ப திழிதிணை ஆயின்
அற்றோ டுருபின் மேலும் உறுமே
அன்றேல் நம்இடை அடைந்தற் றாகும். [உருபு. சூ. 6.]

["எல்லாம்" என்னும் பொதுப்பெயர், அஃறிணையில் வரும்போது, அதனோடு ஆறு உருபும் புணர்ந்தால், இடை

யில் அற்றுச்சாரியையும், உருபின்மேல் முற்றும்மையும், பெறும்; உயர்திணையில் வரும்போது, இடையில் நம்முச்சாரியையும், உருபின்மேல் முற்றும்மையும், பெறும்.]

(உ-ம்.) (1.) எல்லாவற்றையும், எல்லாவற்றினும்.
(2.) எல்லாநம்மையும், எல்லாநம்மாலும்.



**79.** THE DECLENSION OF எல்லாரும் AND எல்லீரும்.

எல்லாரும் எல்லீரும் என்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே. [உருபு. சு 7.]

["எல்லாரும், எல்லீரும்" என்னும் பெயர்களோடு ஆறுருபும் புணரும்போது, அவ்விரு பெயரின் ஈற்றிலுள்ள "உம்" என்னுமிடைச்சொல்லை நீக்கிப், படர்க்கைப் பெயருக்குத் "தம்" என்னுஞ் சாரியையும், முன்னிலைப்பெயர்க்கு "நும்" என்னுஞ் சாரியையும், சார்ந்துவர, உருபின் பின்னே "உம்" வந்து பொருந்தும்.]

(உ-ம்.) (1.) எல்லார்தம்மையும், எல்லாரையும்.
(2.) எல்லீர் நும்மையும், எல்லீரையும்.

☞ நந்தம்மை நுந்தம்மை என, "தம்" என்னுஞ் சாரியை, தன்மைமுன்னிலைகளிலும் வருதல், இடவழுவமைதி.



**80.** THE DECLENSION OF தான், தாம், நாம், யான், யாம், நீ, AND நீர்.

தான் தாம் நாம் முதல் குறுகும் யான் யாம்
நீ நீர் என் எம் நின் நும் ஆம்பிற
குவ்வின் அவ்வரும் நான்கா றிரட்டல. [உருபு. சு. 8.]

[தான், தாம், நாம், ஆகிய மூன்று பெயரும், வேற்றுமை உருபைப் பெறும்போது தன், தம், நம், என நெடில் முதல் குறுகும்; யான், யாம், நீ, நீர், ஆகிய நான்கு பெயர்களும், வேற்றுமை உருபைப் பெறும்போது, என், எம், நின், நும், என வரும்; இவ்வேழு பெயரோடும் கு உருபு புணர்ந்தால், நடுவே அகரச்சாரியை வரும்; குவ்வுருபின் அகரச் சாரியை வந்தாலும், ஆறும் வேற்றுமை உருபுகள் வந்தாலும், இவ்வேழு சொற்களிலும் இறுதியாகிய தனிக்குறில் முன் ஒற்றுகள் இரட்டாவாம்.]

☞ (1.) "பிற" என்றதனால் பின்வருவனவுங் கொள்க:—

நீ [1-ம் வேற்றுமை.], உன்னை [2-ம் வேற்றுமை.]
நீர் [1-ம் வேற்றுமை.], உம்மை [2-ம் வேற்றுமை.]
[மற்றவைகளும் உருபேற்று இவ்வாறே வரும்.]

(2.) நீ என்பது நுன் என அருமையாய் வருதலும் உண்டு:
(உ-ம்.) "நோய்போ மருந்தென்று நுன்றிரு வாய்மொழி நோக்குவித்து."
[கம்பர்-சடகோபர் நூற்றந்தாதி.]



**81.** வேற்றுமை உருபு, வகரஇற்றுச்சுட்டோடு புணரும்போது, வரும் விதம்.—THE DECLENSION OF வ ENDING DEMONSTRATIVES.

வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே. [உருபு. சூ. 11.]

[வ ஈற்று மூன்று சுட்டுப்பெயருக்கும், வேற்றுமை உருபுகள் புணரும் இடத்தில், அற்றுச்சாரியை பொருந்துதல் முறைமையாம்.]

(உ-ம்.) அவற்றை, இவற்றை, உவற்றை.

☞ (1.) "வழியே" என்றதனால், அவற்றினை, இவற்றினை, என இன் சாரியை பெறுதலும், தனிக்குறில் முன் ஒற்றுயிர் வந்த இடத்தில் இரட்டாமையும், அமையும் எனக் கொள்க.

(2.) அற்றுச்சாரியை இல்லைஆயின் தொகுத்தல் எனக்கொள்க:

(உ-ம்.) "குழைவிழும் அவில்விழுங் கொடித்திண் டேர்களே." [இரா. 1. 4. 55.]

[அவ் + இல் = அவில்.]



## 82. THE DECLENSION OF அஃது, இஃது, AND உஃது.

சுட்டின்முன் ஆய்தம் அன்வரிற் கெடுமே. [உருபு.சூ.12.]

[அஃது, இஃது, உஃது, என்னும் இம்மூன்று சுட்டுப்பெயர்களோடு உருபுகள் புணரும்போது, "அன்" சாரியை வந்தால், ஆய்தங்கெடும்.]

(உ-ம்.) (1.) அஃது + அன் + ஐ = அதனை.

(2.) இஃது + அன் + ஆல் = இதனால்.

☞ (1.) ஆய்தம் இல்லாத அது முதலிய சுட்டுப்பெயர்கட்கும் இவ்விதியே அமையும்:

(உ-ம்.) அது + அன் + ஐ = அதனை.

(2.) "வரின்" என்றதால், அன் சாரியைக்குப்பின் உகரச் சாரியையும் வரும் எனக்கொள்க:

(உ-ம்.) அதனுக்கு, இதனுக்கு.



## 83. அத்து DROPS ITS INITIAL AFTER அ.

அத்தின் அகரம் அகரமுனை இல்லை. [உருபு. சூ. 13.]

["அத்து" சாரியை அகர உயிர் ஈற்றின் பின்வரின், அதன் முதல் எழுத்தாகிய அகரம் கெடும்.]

(உதாரணம்.)

(1.) மரம் + அத்து + ஐ = மர + (அ)த்து + ஐ = மரத்தை.

(2.) மக + (அ)த்து + கை = மகத்துக்கை.

**84.** *சாரியை காணும் வகை.*—HOW THE INCREMENT IS TO BE DISCOVERED.

*இதற்கிது சாரியை எனின்அள வின்மையின்*
*விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை*
*நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்*
*ஒன்ற உணர்த்தல் உரவோர் நெறியே.* [உருபு. சூ. 14.]

*[விகுதி முதலிய புணர்ச்சிகளில், இதற்கு இது சாரியை என்று அளவுசெய்து விதித்தனவற்றுள்ளும், ஒழிந்தனவற்றுள்ளும், தனித்தனிச் சொல்லத்தொடங்கினால் அளவுபடாதாதலால், விகுதி முதலிய புணர்ச்சிகள் வரும் இடத்தில், அப்புணர்ச்சிகளைப் பகுத்து, எ, அ, முதலிய எழுத்துச்சாரியைகளையும், அன், ஆன், முதலிய பதச்சாரியைகளையும், இவ்விரண்டு சாரியையும் இல்லாமல் நிற்கிற இயல்பையும், தெரிய அறிவித்தல், பெரியோருடைய நெறியாம்.]*



## புறனடை.

**85.** *இரண்டாம் வேற்றுமையைக்குறித்து.*—PECULIARITIES OF THE SECOND CASE.

*இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்*
*உயர்திணை இடத்து விரிந்தும் தொக்கும்*
*விரவுப் பெயரின் விரிந்து நின்றும்*
*அன்ன பிறவும் ஆகும் ஐ உருபே.* [உருபு. சூ. 16.]

*[பொது விதியோடு முடிதலே அன்றி, அப்படி விதித்த இயல்பிலே விகாரமாயும், விகாரத்திலே இயல்பாயும், உயர்திணையில் விரிந்தும் மறைந்தும், பொதுப்பெயரில் விரிந்தும் மறைந்தும், இவைபோல்வன பிறவேறுபாடாயும் வரும், இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சி.]*

(உதாரணம்.)

(1.) "நிற்புறம் காக்க".......... [இயல்பில் விகாரம்.]
(2.) மண்கொணர்ந்தான்......... [விகாரத்தில் இயல்பு.]
(3.) நம்பியைக் கொணர்ந்தான், கொற்றனைக் கொணர்ந்தான். } [உயர்திணை, விரவுப்பெயர்களில், விரிந்தன.]
(4.) பல்லோர் அறியுஞ்சொல், ஆண்பெற்றாள் .......... } [உயர்திணை, விரவுப்பெயர்களில், மறைந்தன.]

☞ "பிறவும்" என்றதனால், பின்வருவனவும் அமையும்:—

(1.) வரகுகட்டினான்............. [இயல்பில் இயல்பு.]
(2.) பலாக்குறைத்தான் .......... [விகாரத்தில் விகாரம்.]
(3.) தற்கொண்டான் ............ [உறழ்ச்சியில்திரிதல்.]
(4.) உதுகாண் / உதுக்காண் } .............. [இயல்பில் விகற்பம்.]



# சொல்லதிகாரம்.

## ETYMOLOGY.



## I-வது: பெயரியல். — OF NOUNS.

### மொழி.

**86.** *சொல் இன்னதென்பது.*—சொல் DEFINED.

*ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி என்று*
*இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்னையும்*
*மூவகை இடத்தும் வழக்கொடு செய்யுளின்*
*வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.*
[ பெயர். சூ. 2. ]

[ *ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி, என மூன்று பிரிவை உடையதாகி, இருதிணை ஆகிய ஐம்பாற் பொருளையும், அப்பொருளை அன்றித் தன்னையும், மூன்றிடத்தி லும், வழக்கிலும் செய்யுளிலும், வெளிப்படையாலும் குறிப் பினாலும் விளக்குவது, சொல்லாகும்.* ]



**87.** *சொல் மூன்றுகும் வகை.*—THE THREE KINDS OF சொல்.

*ஒருமொழி ஒருபொரு ளனவாம் தொடர்மொழி*
*பலபொரு ளனபொது இருமையும் ஏற்பன.*
[ பெயர். சூ 3. ]

[ *ஒருமொழிகளாவன, ஒரு பொருளைத் தருவனவாம். தொடர்மொழிகளாவன, பல பொருளைத் தருவன. பொதுமொழிகளாவன, ஒரு மொழிக்கும், தொடர்மொழிக்கும், பொதுவாய் நிற்பன.* ]

*(உதாரணம்.)*

(1.) *நிலம், நட, உறு, மன்.................* [ஒருமொழிகள்.]
(2.) *நிலம்வலிது, அதுசெய், சாலப்பெயரின்.* [தொடர்மொழிகள்.]
(3.) *எட்டு, தாமரை, வேங்கை.............* [பொதுமொழிகள்.]

☞ எட்டு = எள் + து = எள் உண்; எட்டு = 8.

தாமரை = தாவும்மரை; தாமரை = தாமரை என்னும் கொடி.
வேங்கை = வேகும்கை; வேங்கை = ஓர் புலி அல்லது ஓர் மரம்.

---

## திணை.

---

**88.** உயர்திணை, அஃறிணை.—HIGH CASTE AND NO CASTE NOUNS.

*மக்கள் தேவர் நரகர் உயர்திணை*
*மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.* [பெயர்.சூ.4.]

[மக்கள், தேவர், நரகர், ஆகிய இவர்களைக் குறிக்கும் சொல், உயர்திணைச் சொல்லாம்; இவர்கள்தவிர, உயிருள்ளவைகளையும், இல்லாதவைகளையும், குறிக்கும் சொல், அஃறிணைச் சொல்லாம்.]

---

**89.** உயர்திணையின் வகை.—DIVISIONS OF HIGH CASTE NOUNS.

*ஆண் பெண் பலர் என முப்பாற் றுயர்திணை.*
[பெயர். சூ. 5.]

[உயர்திணைஆனது, ஆண், பெண், பலர், என மூன்று பாலை உடையது.]

(உ-ம்.) உயர்திணை.
(1.) ஆண்பால்...... மகன், அரசன்.
(2.) பெண்பால்..... மகள், அரசி.
(3.) பலர்பால்...... அரசர், புத்திரர்.

**90.** அஃறிணையின் வகை.—DIVISIONS OF NO CASTE NOUNS.

ஒன்றே பலஎன் றிருபாற் றஃறிணை. [பெயர். சூ. 6.]

[அஃறிணை ஆனது, ஒன்று, பல, என இரண்டுபாலை உடையது.]

(உ-ம்.) அஃறிணை. { (1.) ஒன்றன்பால்...... அது.
(2.) பலவின்பால்...... அவை, மரங்கள்.



## இடம்.

**91.** மூவிடம்.—THE THREE PERSONS.

தன்மை முன்னிலை படர்க்கைமு விடனே.
[பெயர். சூ. 9.]

[மூவிடம் ஆவன:—தன்மை, முன்னிலை, படர்க்கை.]

(உ-ம்.) (1.) நான் [நடந்தேன்].......... [தன்மை.]
(2.) நீ [நடந்தாய்]........... [முன்னிலை.]
(3.) அவன் [நடந்தான்]........... [படர்க்கை.]



## வழக்கு.

**92.** வழக்கு இவை என்பது.—DIVISIONS OF TAMIL USAGES.

இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉஎன் றுரும் மூவகை இயல்பும்
இடக்க ரடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.
[பெயர். சூ. 10.]

[இலக்கணமுடையது, இலக்கணப்போலி, மரூஉ, என்று வழங்குகிற மூன்றுவகை இயல்பு வழக்கும், இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி, என்று வழங்குகின்ற மூன்று தகுதி வழக்குடனே, வழக்கிலக்கணம் ஆறும்.]

### [I. இயல்பு வழக்கு.]

(உதாரணம்.)

(1.) நிலம், நீர், தீ ........... [இலக்கணமுடையது; அ-து: இலக்கண வழியால் வருவது.]

(2.) முன்றில் [= இல்முன்]...
புறநகர் [= நகர்ப்புறம்]
மீகண் [= கண்மீ]..... [இலக்கணப்போலி; அ-து: இலக்கணம் இல்லை ஆனாலும், இலக்கணமுடையதுபோல் வருவது.]

(3.) அருமந்த பிள்ளை = அருமருந்தன்ன பிள்ளை......
சோணாடு [= சோழநாடு] [மரூஉ; அ-து: இலக்கணம் சிதைந்து மருவியது.]

### [II. தகுதி வழக்கு.]

(உதாரணம்.)

(1.) கால்கழீஇவருதும்...... [இடக்கர் அடக்கல்; அ-து: சொல்லத்தகாததை மறைத்துச் சொல்வது.]

(2.) துஞ்சினார் [=செத்தார்].
திருமுகம் [=ஓலை].....
வெள்ளாடு [=காராடு].... [மங்கலம்; அ-து: மங்கலம் இல்லாததைத் தவிர்த்து மங்கலமாகச் சொல்வது.]

(3.) பறி [=பொன்]... ....
காரை [=ஆடை]........
சொல்விளம்பி [=கள்].. [குழூஉக்குறி; அ-து: ஒரு கூட்டத்தார், ஏதாவது ஒரு காரணம் பற்றி, ஒரு பொருளின் சொல்லை ஒழித்து, வேறொரு சொல்லால் சொல்வது.]

---

## வெளிப்படை, குறிப்பு.

**93.** வெளிப்படை, குறிப்பு.—DIRECT AND INDIRECT EXPRESSIONS.

ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயர்அன் மொழிவினைக் குறிப்பே
முதல்தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை.

[பெயர். சூ. 12.]

[இருதிணை ஆண் பெண்ணுள் ஒன்றை ஒழிக்கும் பொதுச் சொல், வலித்தல் முதலிய ஒன்பது விகாரச்சொல், மூன்று தகுதி வழக்குச்சொல், ஆகுபெயர்ச்சொல், அன்மொழித் தொகைச்சொல், வினைக்குறிப்புச்சொல், முதற் குறிப்புச் சொல், தொகைக் குறிப்புச்சொல், இந்த முதல் தொகையல் லாத வேறுவழியால் வரும் குறிப்புச்சொல், ஆகிய இவைக ளும், இவைபோன்ற வேறு சொற்களும், குறிப்பினால் இரு திணை ஐம்பாற் பொருளைத்தரும் சொற்கள்ஆம்; இவை அல் லாத மற்றைச் சொற்கள் எல்லாம், வெளிப்படையால் அப் பொருளைத் தரும் சொற்கள்ஆம்.]

(உதாரணம்.)

(1.) ஆயிரம்மக்கள் பொருதார்.. [உயர்திணை ஆண்பால்.]

[மக்கள், பொதுப்பெயர்; பொருதார், விகுதியால் பொறுவினை.]

(2.) பிறைக்கடை பிறக்கிட.... [பிறங்கிட, விகாரம்.]

(3.) பறி.................... [பொன், தகுதிவழக்கு.]

(4.) புளித்தின்றான்............ [புளியம்பழம், ஆகுபெயர்.]

(5.) முற்றிழாய்!............. [பெண்ணே! அன்மொழித் தொகை.]

(6.) இவணிப்போதுசெல்வன்.... [வினைக்குறிப்பு.]

(7.) ஆத்திசூடி படித்தான்........ [முதற்குறிப்பு.]

(8.) கண்ணனோடு ஐவர்வந்தார்.. [பாண்டவர், தொகைக்குறிப்பு.]

[மற்றவைகளுக்குதாரணம் ஆராய்ந்துணர்க.]



## சொல்.

**94.** சொல் இத்தனை என்பது.—CLASSES OF WORDS.

அதுவே,—இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனஇரண் டாகும் இடைஉரி அடுத்து
நான்கும்ஆம் திசைவட சொல்லணு காவழி.

[பெயர். சூ. 13.]

[முன் காட்டிய சொல் இயற்சொல், திரிசொல், என் னும் தன்மையை உடைய பெயர்ச்சொல்லும், வினைச்சொல்

லும், என இரண்டாம்; இடைச்சொல்லும், உரிச்சொல்லும், அவற்றுடன் சேர்ந்து, நான்கும்ஆம்; (இப்படி நான்காய் வருவது) திசைச்சொல்லும், வடசொல்லும், அவற்றுடன் சேராதவிடத்து.]



**95.** *இயற்சொல் இவை என்பது.*—ORDINARY TAMIL WORDS.

*செந்தமிழ் ஆகித் திரியா தியார்க்கும்*
*தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.*
[பெயர். சூ. 14.]

[செந்தமிழ் நிலத்துமொழி ஆகி, திரிசொல்லைப்போல் ஆகாமல், கற்றோருக்கும் மற்றோருக்கும், தம்பொருளை ஒரு சரியாய் விளக்குகின்ற தன்மையை உடைய உலகவழக்கே இயற்சொல்.]

(உ-ம்.) (1.) மண், பொன், மரம் .... [பெயர் இயற்சொல்.]
(2.) நடந்தான், இருப்பான். [வினை இயற்சொல்.]
(3.) அவனை, அவனால்...... [ஐ, ஆல் இடை இயற்சொல்.]
(4.) அழகு, அன்பு ........ [உரி இயற்சொல்.]



**96.** *திரிசொல் இவை என்பது.*

SYNONYMS AND WORDS OF SEVERAL SIGNIFICATIONS.

ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் ஆகும்.
[பெயர். சூ. 15.]

[ஒரு பொருளைக்கருதிய பலசொல் ஆகியும், பலபொருளைக் கருதிய ஒருசொல் ஆகியும், அரிதாகக் கற்றோர் அறிகின்ற பொருளை உடையனவாய் வருவன, திரிசொல்லாம்.]

(1.) பெயர்.

(உ-ம்.) கிள்ளை, சுகம், தத்தை.

[கிளி என்னும் ஒரு பொருள் குறித்த பலபெயர்த் திரிசொல்.]

வாரணம் [=யானை, சங்கு, கோழி, கவசம்.]
[பலபொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல்.]

(2.) வினை.

படர்ந்தான், சென்றான் [=போனான்.]
[ஒருபொருள் குறித்த பலவினைத் திரிசொல்.]

இறுத்தான் [=சொன்னான், வடித்தான்.]
[பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல்.]

(3.) இடை.

சேறும், வருதும் [றும், தும்; தன்மைப் பன்மை விகுதிகள்.]
[ஒருபொருள் குறித்த பலஇடைத் திரிசொல்.]

கொல்.
[இது ஐயப்பொருளில் ஆவது, அசைநிலைப் பொருளில் *ஆவது, வரும் ஆதலால், பல பொருள் குறித்த ஓரிடைத் திரிசொல்.]

(4.) உரி.

சால், உறு, தவ, நனி, கூர், கழி [=மிகல்.]
[ஒருபொருள் குறித்த பலஉரித் திரிசொல்.]

கடி [=மணம், காப்பு, கூர்மை, இன்பம், அச்சம்.]
[பலபொருள் குறித்த ஒருரித் திரிசொல்.]



**97.** திசைச்சொல் இவை என்பது.—WORDS PECULIAR TO CERTAIN DISTRICTS.

செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழ்ஒழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப. [பெயர். சூ.16.]

[செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலத்திலும், பதினெட்டு மொழிகளுள், தமிழ் ஒழிந்த மற்றைப் பாஷைகள் வழங்குமிடங்களிலும், உள்ளோரது குறிப்பை உடையனவாய், அவ்விடங்களில் இருந்து செந்தமிழ் நிலத்தில் வந்து வழங்குவன, திசைச்சொல் என்று சொல்வார் புலவர்.]

(உ-ம்.) (1.) தென்பாண்டியில்.... [பசு = பெற்றம்.]
(2.) குட்டநாட்டில்...... [தாய் = தள்ளை.]
(3.) குடநாட்டில்........ [தந்தை = அச்சன்.]

(4.) "திக்கயம் வலியில; தேவர் மெல்லியர்;
முக்கணான் கயிலையு முரணின் றுயது;
மக்களுங் குரங்குமே வலிய ராமெனின்,
அக்கட விராவணற் கமைந்த வாற்றலே." [இரா. உயுத்தகாண்டம்.]

[அக்கட = అక్కడ = அவ்விடம்.]



**98.** வடசொல் இவை என்பது.—SANSCRIT WORDS.

பொதுஎழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.
[பெயர். சூ. 17.]

[ஆரியத்துக்கும் தமிழுக்கும் பொதுவாகிய எழுத்தாலும், ஆரியத்துக்குமாத்திரமே உரிய சிறப்பெழுத்தாலும், இவ்விரு வகை யெழுத்தாலும், செந்தமிழ்ச் சொல்லைப்போல் வடதிசையில் இருந்து செந்தமிழ் நாட்டில் வந்து வழங்குவன, வடசொல்.]

(உ-ம்.) (1.) அமலம், கமலம்....... [பொதுஎழுத்தால்.]
(2.) சுகி, சுத்தி ............ [சிறப்பெழுத்தால்.]
(3.) கடினம், சலம்........ [ஈரெழுத்தால்.]



## பெயர்.

**99.** பெயர்ச்சொல்.—NOUN.

இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழில்அல காலம்தோற்றா
வேற்றுமைக் கிடன்ஆய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவனபெயரே. [பெயர். சூ. 18.]

[இடுகுறியும் காரணக்குறியும், மரபையும் ஆக்கத்தையும் தொடர்ந்து, வினையால் அணையும் காரணக்குறி அல்லாதவை காலத்தைக் காட்டாமல், எட்டு வேற்றுமையும் சார்ந்து வருதற்கு இடமாய், இருதிணை, ஐம்பால், மூவிடம், ஆகியவற்றுள் ஒன்றை ஆவது, பலவற்றை ஆவது, ஏற்பனவாய் வருவன, பெயர்கள் ஆம்.]

(உதாரணம்.)

(1.) மரம், பனை, பலா.................... [இடுகுறிமரபு.]

(2.) அவன், பறவை, விலங்கு........... [காரணக்குறிமரபு.]

(3.) "பொன்போலும் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கிசையுநதனளே; மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாறுய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்குங் காடு." [பொய்யாமொழிப் புலவர் பாடல்]

[குமரன் பெயர் = முட்டை; இடுகுறி ஆக்கம்.]

(4.) பொன்னன், பூணன்.......... [காரணக்குறி ஆக்கம்.]

மரபு ஆக்கம் தொடராதவை:—

(5.) மரம்............. .... [இடுகுறிப் பொதுப்பெயர்.]

(6.) பனை.................. [இடுகுறிச் சிறப்புப்பெயர்.]

(7.) அணி = (ஆபரணம்).... [காரணச் சிறப்புப்பெயர்.]

(8.) முடி.................. [காரணச் சிறப்புப்பெயர்.]

(9.) அந்தணன்............. [காரண இடுகுறிப்பெயர்.]

[அந்தணர் = அம் + தண் (மை) + அன் = அழகிய தண்மையை உடையவன்.]

☞ ஆண், பெண், பலர், ஒன்று, பல, என்னும்பாற் பெயர் வரும்விதம்:—

(1.) பொருள்முதலிய ஆறுடன், சுட்டு, வினு, பிற, மற்று, இவைகளின் அடியாகப் பிறந்து, அன், ஆன், விகுதிகளைக்கொண்டு முடியுஞ் சொற்களும், நம்பி, ஆடூஉ, விடலை, கோ, வேள், குரிசில், தோன்றல், முதலிய பெயர்களும், ஆண்பாற் பெயராகும.

(உ-ம்.) நாடன், ஊரான், தையான், செங்கணான், கரியன், ஈவான், அவன், எவன், பிறன், மற்றையான்

(2.) மேற்கூறியவைகள் அடியாகப் பிறந்து, ள, இ, என்னும் விகுதிகளைப் பெற்று வருவனவும், தோழி, செவிலி, மகடூஉ, நங்கை, முதலான பெயர்களும், பெண்பாற் பெயர்களாம்.

(உ-ம்.) தமள், கருவூரள் ஆதிரையாள், தடங்கண்ணி, பெரியள், ஈவாள், அவள், எவள்.

(3.) அவ்வாறே பிறந்த ரகர இற்றுப்பெயர்களும், கள் என்னும் விகுதி ஏற்றுவருவனவும், பலர்பாற் பெயர்களாம்.

(உ-ம்.) தமர், கோக்கள், அரசர்கள், எவர், அவர்.

(4.) மேற்காட்டியபடியே பிறந்த துவ்விகுதியை உடைய பெயர்களும், ஒன்று என்னும் பெயரும், ஒன்றன்பாற் பெயராம்.

(உ-ம்) கரியது, ஒன்று, எது, இது, அஃது.

(5.) முன்சொன்ன வழியே பிறந்து, வை, அ, கள், விகுதிகளைப் பெற்று வருவனவும், ஒன்று அல்லாத எண்ணுகு பெயர்களும், வகர இற்றுச் சுட்டும், உள, இல, பல, சில, முதலிய பெயர்களும், பலவின்பாற் பெயர்களாம்.

(உ-ம்.) நெடியவை, நெடியன, குதிரைகள், இரண்டு, எவை, இவை, அவ்.

[பெயர். சூ. 19—23.]



**100.** பால்பகா அஃறிணைப்பெயர்.—NO CASTE NOUNS BOTH SINGULAR AND PLURAL.

பால்பகா அஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.
[பெயர். சூ. 24.]

[அஃறிணைப் பெயர்களுள் ஒருமை, பன்மை, பகுக்கப்படாத பெயர்கள் எல்லாம், அத்திணையின் இருபாலுக்கும் பொதுவான பெயர்களாம்.]

(உ-ம்.) (1.) குதிரைவந்தது .......... [ஒருமை.]

(2.) குதிரைவந்தன .......... [பன்மை.]

**101.** *தன்மை, முன்னிலை, படர்க்கைப்பெயர்கள்.*

THE PERSONS OF பெயர்.

*தன்மை யான் நான் யாம் நாம் முன்னிலை*
*எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ*
*அல்லன படர்க்கை எல்லாம் எனல்பொது.*

[பெயர். சூ. 28.]

[*யான், நான், யாம், நாம், இவை தன்மைப்பெயர்கள்; எல்லீர், நீயிர், நீவிர், நீர், நீ, இவை முன்னிலைப்பெயர்கள்; இவ்வொன்பதும் அல்லாத பெயர்கள் படர்க்கைப்பெயர்களாம்; அவற்றுள் எல்லாம் என்பது, மூவிடத்திற்கும் பொதுவாம்.*]



**102.** *தான் முதலியவை ஒருமை; தாம் முதலியவை பன்மை.*

*தான், யான்,* &c. SINGULAR; *தாம், யாம்,* &c. PLURAL.

*தான் யான் நான் நீ ஒருமை பன்மைதாம்*
*யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர்.* [பெயர். சூ. 30.]

[*தான், யான், நான், நீ, என்கிற இவை இருதிணை ஒருமையில் வரும் பெயர்களாம்; தாம், யாம், நாம், எல்லாம், எல்லீர், நீயிர், நீர், நீவிர், என்பவை இருதிணைப் பன்மையில் வரும் பெயர்களாம்.*]



**103.** *எண்ணால் வரும் உயர்திணைப்பெயர்.* [*புறனடை.*]

HIGH CASTE NOUNS FROM NUMBERS.

*ஒருவன் ஒருத்தி பெயர்மேல் எண்ணில.* [பெயர். சூ. 31.]

[*ஒன்று என்னும் எண்ணால், ஒருவன், ஒருத்தி, என வருமே அல்லாமல், இவற்றின்மேல் இரண்டு முதலாகிய எண்களால், இந்த ஆண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும் வரா.*]

**104.** ஒருவர் என்னும் பெயர்.—THE NOUN ஒருவர்.

*ஒருவர் என்ப துயர்இரு பாற்றாய்ப்*
*பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.* [பெயர்.சூ.32.]

["ஒருவர்" என்னுஞ்சொல் உயர்திணை ஆண், பெண், ஆகிய இரண்டுபாலுக்கும் பொதுவாய், அத்திணையிலே பன்மை வினைமுற்றைக்கொண்டு முடியும் தன்மையை உடையது, என்று புலவர் சொல்வார்.]

(உ-ம்.) (1.) ஆடவருள் ஒருவர் அறத்தின் வழிநிற்பார்.
(2.) பெண்டிருள் ஒருவர் கொழுநன் வழிநிற்பார்.



**105.** ஆகுபெயர் வரும்விதம்.—METONYMY AND SYNECDOCHE.

*பொருள்முதல் ஆறோ டளவைசொல் தானி*
*கருவி காரியம் கருத்தன் ஆதியுள்*
*ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்*
*தொன்முறை உரைப்பன ஆகு பெயரே.* [பெயர்.சூ. 33.]

[பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், ஆகிய ஆறுடனே, நால்வகை அளவை, சொல், தானி, காரணம், காரியம், கருத்தா, முதலாய் வரும் பொருள்களுள், ஒரு பொருளின் இயற்பெயரால், அப்பொருளுக்கு இசைந்த வேறு ஒரு பொருளை, முற்காலந்தொடுத்து வழங்கிவருகிற முறைப்படியே, சொல்லப்பட்டு வருவன, ஆகுபெயர்ஆம்.]

(உதாரணம்.)

(1.) குவளைபோலுங் கண் .... [குவளை, பொருள் ஆகுபெயர்.]

[முதற்பொருளின் பெயர் சினைப்பொருளுக்கு ஆனது.]

(2.) "ஊர்கேட்ப" .......... [ஊர், இட ஆகுபெயர்.]

[இடப்பெயர் மனிதருக்கு ஆனது.]

(3.) கார் அறுத்தது .......... [கார், கால ஆகுபெயர்.]
[மாரிகாலத்துப்பெயர் அக்காலத்துப் பயிருக்கு ஆனது.]

(4.) வெற்றிலை நட்டான் ...... [இலை, சினை ஆகுபெயர்.]
[அவயவத்தின் பெயர் முதற்பொருளாகிய கொடிக்கானது ]

(5.) "தூண்டுட்டும் ஆம்கீழ்" [கீழ், குண ஆகுபெயர்.]
[குணத்தினபெயர் குணியாகிய மனிதனுக்கு ஆனது.]

(6.) வற்றல் உண்டான் ....... [வற்றல், தொழில் ஆகுபெயர்.]
[தொழிலின்பெயர் உணவிற்கு ஆனது.]

(7.) காலாலே நடந்தான். [கால், எண்ணல் அளவை ஆகுபெயர்.]
[எண்ணல் அளவைப்பெயர் உறுப்பிற்கு ஆனது.]

துலாக்கோல் ......... [துலா, எடுத்தல் அளவை ஆகுபெயர்.]
நாழி உடைந்தது ...... [நாழி, முகத்தல் அளவை ஆகுபெயர்.]
இப்புலம்பத்துப்பரப்பு [பரப்பு, நீட்டல் அளவை ஆகுபெயர்.]

(8.) இதற்குரைசொல் ........ [உரை, சொல் ஆகுபெயர்.]
[சொல்லின்பெயர் பொருளுக்கு ஆனது.]

(9.) விளக்கு முறிந்தது.......... [விளக்கு, தானி ஆகுபெயர்.]
[தீபத்தின்பெயர் தண்டினுக்கு ஆனது.]

(10.) திருமொழி .............. [காரண ஆகுபெயர்.]
[முதற்காரணத்தினபெயர் செய்யுளுக்கு ஆனது.]

(11.) இந்நூல் அலங்காரம்... [அலங்காரம், காரிய ஆகுபெயர்.]
[காரியத்தின்பெயர் காரணத்திற்கு ஆனது ]

(12.) இந்நூல் திருவள்ளுவர் [திருவள்ளுவர், கருத்தா ஆகுபெயர்.]
[கருத்தாவின் பெயர் நூலுக்கு ஆனது.]

(13.) வெற்றிலை நட்டான் .... [அடைஅடுத்த ஆகுபெயர்.]
[இலை ஆகிய சினைப்பெயர், வெறுமை என்கிற அடை அடுத்து, இலையை உடைய பொருள் ஆகிய கொடிக்கு ஆனது.]

☞ (1.) "ஆதி" என்றதனால், இன்னும் சில அமையும்.—
(உ-ம்.) கார்லைவந்தான், பாவைவந்தான். [உவமை ஆகுபெயர்.]

(2.) கார் என்னுங் கருநிறத்தின் பெயர், கார்மேகத்துக்கும், மாரிகாலத்துக்கும், ஆகும்; இது இருமடி ஆகுபெயர். மேலும், அது கார்காலத்துப் பயிருக்கும் ஆகும்போது, மும்மடி ஆகுபெயர்ஆம்.

(3.) வகரக்கிளவி............... [இருபெயரொட்டாகுபெயர்.]

[வகரம் ஆகிய அடைமொழி, மொழியைக் குறியாமல், எழுத்தைக் குறிக்கின்றது; கிளவி என்பதே ஆகுபெயர்ப் பொருளைத் தெரிவிக்கின்றது.]

(4.) மனுஷருக்கிட்டு வழங்கிவரும், தேவர் முதலியோரது பல பெயரும், ஒருவகை ஆகுபெயராம் எனக்கொள்க.



## வேற்றுமை.

### 106. வேற்றுமை இன்னதென்பதும் இத்தனை என்பதும்.

CASE DEFINED: THE NUMBER OF CASES.

ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.

[பெயர். சூ. 34.]

[ஏற்ற எவ்வகையான பெயர்க்கும் இறுதியாய், அப்பெயர்ப்பொருளை வேறுபடுத்துவன ஆகிய வேற்றுமைகள் எட்டாம்.]



### 107. வேற்றுமையின் பெயரும் முறையும்.

THE NAME AND ORDER OF THE CASES.

பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளிஎன் றாகும் அவற்றின் பெயர்முறை.

[பெயர். சூ. 35.]

[அவ்வேற்றுமைகளுடைய பெயர்களும் முறையும் ஆவன:—பெயர், ஐ, ஆல், கு, இன், அது, கண், விளி, என்பனஆம்.]

**108.** எழுவாய் மற்ற உருபுகளை ஏற்கும்.

THE SIX CASUAL TERMINATIONS ARE ADDED TO THE NOMINATIVE.

ஆறன் உருபும் ஏற்கும்அவ் உருபே. [பெயர். சூ. 36.]

[எழுவாய்உருபு, ஐ முதலிய ஆறு வேற்றுமை உருபுகளையும் ஏற்கும்.]



**109.** ஐ முதலிய உருபு ஏலாதவை.

WORDS WHICH DO NOT ADMIT OF THESE TERMINATIONS.

நீயிர் நீவிர் நான் எழுவாய் அலபெறா. [பெயர். சூ. 37.]

[நீயிர், நீவிர், நான், என்னும் மூன்று பெயரும், எழுவாய் வேற்றுமையல்லாத பிறவேற்றுமைகளை ஏலா.]



**110.** எழுவாய் வேற்றுமை.—THE NOMINATIVE.

அவற்றுள், எழுவாய் உருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினக்கொளல் அதன்பய னிலையே.
[பெயர். சூ. 38.]

[வேற்றுமைகளுள், முதல் வேற்றுமையின் உருபு, ஐ முதலிய உருபு பெற்றுத்திரியாத பெயரேஆம்; வினை, பெயர், வினா, ஆகிய இவைகளைக் கொள்வதே, அதன் பொருணிலை ஆம்.]

(உ-ம்.) (1.) "தீயினுற் சுட்டபுண் உள்ளாறும்." [குறள். 13. 9.]
["ஆறும்," வினை.]

(2.) "அறத்தான் வருவதே இன்பம்." [குறள். 4. 9.]
["இன்பம்," பெயர்.]

(3.) "ஏதிலனா நோவ தெவன்." [நீதிநெறி. 25.]
["எவன்," வினா.]

☞ இம்முதல் வேற்றுமைக்கு உருபு இல்லை ஆயினும், ஆனவன், என்பவன், ஆனவள், ஆனது, என்பது, என்கின்றது, என்றது, முதலானவை சொல்லுருபாக வரும் எனக்கொள்க.

**111.** இரண்டாம் வேற்றுமை.—THE SECOND CASE.

இரண்டா வதன்உரு ஐயே அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும். [பெயர். சூ. 39.]

[இரண்டாம் வேற்றுமையின் உருபு, ஐ என்பதே; அதன் பொருள் ஆக்கல் முதலிய ஆறும் பிறவுமாம்.]

(உதாரணம்.)

(1.) வீட்டைக் கட்டினான்......... [ஆக்கல்.]
(2.) மரத்தை வெட்டினான்......... [அழித்தல்.]
(3.) மோட்சத்தை அடைந்தான்.... [அடைதல்.]
(4.) ஊரை விட்டான்.... ........... [நீத்தல் = விடுதல்.]
(5.) மலையை ஒத்தான்............ [ஒத்தல்.]
(6.) செல்வத்தை உடையான்....... [உடைமை.]
(7.) அரசன் பகைவரைச் சிறைச் சாலையை அடைவித்தான். [செயப்படுபொருள் குன்றாப் பிறவினைக்கு, இரண்டு செயப்படுபொருள் வந்தன.]



**112.** மூன்றாம் வேற்றுமை.—THE THIRD CASE.

மூன்றா வதன்உரு ஆல்ஆன் ஒடொடு
கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்.
[பெயர். சூ 40.]

[மூன்றாம் வேற்றுமையின் உருபு, ஆல், ஆன், ஒடு, ஓடு, என்பவைகள்; அவற்றின் பொருள், கருவி முதலிய மூன்றுமே.]

[அது என்பது தொகுதியொருமை.]

(உ-ம்.) (1.) பொன்னாற்செய்த அணி.......... [கருவி.]
(2.) குயவனால் வனையப்பட்ட குடம்..... [கருத்தா.]
(3.) கொற்றனோடு சாத்தன் வந்தான்.... [உடனிகழ்ச்சி.]

☞ (1.) கருவி முதற்கருவி, துணைக்கருவி, என இருவகைப்படும்; சில இடங்களில் ஆல், ஆன், உருபுகள் சினைப்பொருளி லும், ஆல், தோறும் என்னும் பொருளிலும் வரும்.

(உ-ம்.) (1.) கண்ணாற்குருடன்........ ......... [சினைப்பொருள் ஏது.]
(2.) ஊரால்ஓர்மடம்................. ... [தோறும்.]

(2.) இவ்வேற்றுமையில், கொண்டு என்பது கருவிப்பொருளி லும், உடன் என்பது உடனிகழ்ச்சிப்பொருளிலும், பற்றி, குறித்து, என்பவை நிமித்தகாரணப்பொருளிலும், சொல் லுருபுகளாக வரும்; உடன் தவிர, மற்றை மூன்றும் ஐகா ரச்சாரியை பெற்றும் வரும்:—

(உ-ம்) (1.) வாள்கொண்டு வெட்டினான். [= வாளால் வெட்டினான்.]
(2.) என்னுடன் கற்றான்.
(3.) "ஆசைபற்றி அறையலுற்றேன்." [= ஆசையினால் அறையலுற்றேன்.] [இரா. சிறப். பாயி. 4.]
(4.) அவனைக்குறித்து வந்தான். [= அவனால் வந்தான்.]

(3.) இவ்வுருபுகளுள், பின்னைய இரண்டும், நான்காம் வேற்று மைக்குரிய நிமித்தகாரணகாரியப்பொருளில் வந்தால், மூன்றாவது நான்காவதில் வந்த உருபு மயக்கமாகக் கொ ள்க:—

(உ-ம்.) (1.) கல்விபற்றி முயன்றான்.
(2.) புகழ்குறித்துப் பெரும்பொருள் தேடினான்.



**113.** நான்காம் வேற்றுமை.—THE FOURTH CASE.

நான்கா வதற்குரு பாகும் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது ஆதல்
பொருட்டுமுறை ஆதியின் இதற்கிதெனல் பொருளே.
[பெயர். சூ. 41.]

[நான்காம் வேற்றுமை உருபு, கு என்பதே: அதன் பொ ருள், கொடை முதலிய பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சியில், இதற்கு இது என்பது பட வருதல்ஆம்.]

(உதாரணம்.)

(1.) சாத்தனுக்கு வீட்டைக்கொடுத்தான். [கொடை.]
(2.) அவனுக்கு இவன்பகை............ [பகை.]
(3.) கொற்றனுக்குநட்பன் சாத்தன்...... [நேர்ச்சி.]

(4.) அருங்கலம் அரசர்க்குரியது........ [தகுதி.]
(5.) மோதிரத்திற்குப் பொன்............ [அது ஆதல்; முதற் காரண காரியம்.]
(6.) கூழுக்குக் குற்றேவல்.............. [பொருட்டு=நிமித்த காரண காரியம்.]
(7.) கொற்றனுக்கு மகன்.............. [முறை.]

☞ பொருட்டு, நிமித்தம், ஆக, என்னும் இம்மூன்றும், சிறுபான்மை, முதற்காரண காரியப்பொருளினும், பெரும்பாலும், நிமித்தகாரண காரியப்பொருளினும், வரும்:—

(உ-ம்.) (1.) சோற்றின்பொருட்டு, அரிசிகொணர்ந்தான். [முதற்காரணகாரியம்.]
(2.) கூலிபொருட்டு, வேலைசெய்தான். [நிமித்தகாரணகாரியம்.]
[மற்ற உருபுகளையும் இவ்வகையே புணர்த்திக்காண்க.]

இவை, மூன்றும்வேற்றுமைக்குரிய, நிமித்தகாரணப்பொருளில் வந்தால், நான்காவது மூன்றுவதில் வந்த உருபு மயக்கமாம்:—

(உ-ம்.) (1.) "பெண்பொருட் டன்றியும் பிறிதண் டாமெனின்,
மண்பொருட் டன்றியும் வரவும் வல்லதோ." [இரா. உயுத்தகாண்டம்.]
[பெண்பொருட்டு = பெண்ணால்; மண்பொருட்டு = மண்ணால்.]
(2.) தண்டனைக்காகப் பயந்தான். [= தண்டனையினுல் பயந்தான்.]

முன்னைய இரண்டும், இன்சாரியைபெற்றும், பெருமலும், வரும்; பின்னையது, குச்சாரியை பெற்றே வரும்.



**114.** ஐந்தாம் வேற்றுமை.—THE FIFTH CASE.

ஐந்தா வதன்உரு பில்லும் இன்னும்
நீங்கலொப் பெல்லை ஏதுப்பொருளே. [பெயர். சூ. 42.]

[ஐந்தாம் வேற்றுமையினது உருபு, இல், இன், என்பவைகளே; அவற்றின் பொருள், நீங்கல் முதலியனும்.]

(உ-ம்.) (1.) "துனியிற்கரும்புதின்றற்று."........ [நீங்கல்.]
(2.) "பால்உண்குருகிற்றெரிந்து." ...... [ஒப்பு.]
(3.) வேளூரிற்றெற்குச்சேலம்.......... [எல்லை.]
(4.) கல்வியிற் பெரியர் கம்பர்........... [ஏது.]

☞ இவ்வேற்றுமைக்குச் சொல்உருபுகளுமுண்டு; அ-ன: நின்று, இருந்து, காட்டிலும், பார்க்கிலும், என்பவைகளே. இவற்றுள்,

நின்று, இருந்து, என்பவற்றின்முன், இல் என்னும் சாரியை விகற்பித்தும், மற்றை இரண்டு உருபுகட்கும் முன், ஐகாரச் சாரியை நித்தியமாயும், வரும். முன்னையவிரண்டும் நீங்கற் பொருளினும், பின்னையவிரண்டும் எல்லைப் பொருளினுமே, வருதல் காண்க.

[உதாரணம் ஆராய்ந்துகொள்க.]



**115,** ஆறும் வேற்றுமை.—THE SIXTH CASE.

ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்
பன்மைக் கவ்வும் உருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

[பெயர். சூ. 43.]

[ஆறும் வேற்றுமையின் ஒருமைக்கு, அதுவும், ஆதுவும், பன்மைக்கு, அவ்வும் உருபாம்; அவற்றின் பொருள், பண்பு முதலிய ஐந்து தற்கிழமைப் பொருள்களும், அவை அல்லாத பிறிதின் கிழமைப் பொருள்களும்ஆம்.]

[I. தற்கிழமை.]

(உதாரணம்.)

(1.) சாத்தனது கருமை.. [குணம்]
சாத்தனது வரவு..... [தொழில்.] } [பண்பு.]

(2.) கொற்றனது தலை ............
குதிரையினது செவி .......... } [உறுப்பு.]

(3.) மணிதரது தொகுதி ............
நெல்லினது குப்பை .......... } [ஒன்றன்கூட்டம்.]

(4.) மணிகளது தொகுதி .........
பறவைகளது கூட்டம் ........ } [பலவின்கூட்டம்.]

(5.) நெல்லினது பொரி .... ......
மஞ்சளது பொடி ............ } [திரிபின் ஆக்கம்; அ-து: ஒன்று திரிந்து ஒன்றுதல்.]

[II. பிறிதின் கிழமை.]

(உதாரணம்.)

(1.) கொற்றனது குதிரை ........... } [பொருள்.]
சாத்தனது வாள் ..............

(2.) கொற்றனது வீடு .............. } [இடம்.]
சாத்தனது நிலம் ............

(3.) கொற்றனது நாள் ............ } [காலம்]
மாறனது வேனில் ..............

☞ (1.) மற்ற உருபுகள் வருவதற்கு உதாரணம்:—

(1.) எனது கை, நினது தலை, தனது புறம் ......... [அது உருபு]
(2.) என கைகள், நின தாள்கள் .................... [அ உருபு.]
"கழுந்த ராய்உன கழல்பணி யாதவர்." ...... [அ உருபு; உன் + அ = உன.]
[இரா. சி. பாயிரம்.]

(2) "ஆறன் ஒருமைக் கதுவும்" எனக் கூறியிருந்தாலும், உனது கைகள், எனது குணங்கள், எனப் பன்மையிலும் அது உருபு வரும்; வழக்கத்தில், அது அவனது, இது எனது, என, உருபின்பின், அதனை முடிக்குஞ் சொல் தொகையாயும் வரும்.

[இவ்வேற்றுமைக்கு, உடைய என்னுஞ் சொல்லுருபும் உண்டு.]



**116.** ஏழாம் வேற்றுமை.—THE SEVENTH CASE.

ஏழனுருபு கண்ணாதி ஆகும்
பொருள்முதல் ஆறும் ஓரிரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப. [பெயர்.சூ.44.]

[ஏழாம் வேற்றுமையின் உருபு கண்முதலியனாம்; இவற்றின் பொருள் ஆவன, தம்மை ஏற்ற பெயர்ப்பொருள் ஆகிய பொருள்முதலிய ஆறும், இரண்டு கிழமைப் பொருள்களுக்கும் இடமாய் நிற்க, அவற்றை வேறுபடுத்தலாம், என்று புலவர் சொல்வார்.]

(உ-ம்.) (1.) மணியின் கண் ஒளி .... } [இரு கிழமைப் பொருளுக்
(2.) மரத்தின் கண் பறவை.. } கும் பொருள் இடமாயிற்று.]

[மற்றவைகளும் இப்படியே வரும்.]

**117.** ஏழாம் வேற்றுமை உருபுகள்.

THE TERMINATIONS OF THE SEVENTH CASE.

*கண் கால் கடை இடை தலை வாய் திசை வயின்*
*முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்*
*பின் பா டளை தேம் உழை வழி உழி உளி*
*உள் அகம் புறம் இல் இடப்பொருள் உருபே.*
[பெயர். சூ. 45.]

[கண் முதலியவை, ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உருபுகள் ஆம்.]

[இவற்றிற்கு உதாரணம், இராமாயணம் முதலிய நூல்களிற் காண்க.]



**118.** எட்டாம் வேற்றுமை.—THE EIGHTH CASE.

*எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்*
*திரிபு குன்றல் மிகுதல் இயல்பயல்*
*திரியும் ஆம்பொருள் படர்க்கை யோரைத்*
*தன்முகம் ஆகத் தான்அழைப் பதுவே.* [பெயர்.சூ.46]

[எட்டாம் வேற்றுமையின் உருபுகள், விளி அடைந்த பெயர் ஈற்றினது திரிதல், கெடுதல், மிகுதல், இயல்பாதல், ஈற்றுக்கு அயல்எழுத்துத் திரிதல், ஆகியவை ஆம்; அவற்றின் பொருள், படர்க்கை இடத்தாரைத் தனக்கெதிர்முகமாக அழைத்தலே ஆம்.]

(உ-ம்.) குழையாய்! அரச! செல்வனே! நம்பி! மக்காள்!



**119.** விளி உருபு: ஓர் புறனடை.

A REMARK ON THE TERMINATIONS OF THE EIGHTH CASE.

*அண்மையின் இயல்பும் ஈறழிவும் சேய்மையின்*
*அளபும் புலம்பின் ஓவும் ஆகும்.* [பெயர். சூ. 56.]

[மேற்சொல்லிய விளி உருபுகளுள், சமீபவிளிகளுக்கு, இயல்பாதலும், ஈறுகெடுதலும்; தூரவிளிகளுக்கு, அளபெடுத்தலும்; புலம்பல் விளிகளுக்கு, ஓ மிகுந்துவருதலும் ஆகும்.]

( உதாரணம். )

(1.) தம்பி! [இயல்பு;] அரச! [இறுதி.] ........ [அண்மை.]
(2.) மகனேஎ! [பிள்ளாய்! [அளபு.] ......... [சேய்மை.]
(3.) அண்ணாவோ! ......... [புலம்பல்.]



**120.** எட்டாம் வேற்றுமையை ஏற்கா[illegible]ர்கள்.

WORDS NOT ADMITTING OF THE VOCATI[illegible]E.

நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாம்தான் இன்னன விளியா. [பெயர். சூ. 57.]

[நு, மூன்று முதல் வினா, மூன்று சுட்டு, இவைகளைப் பொருந்திய ன, ள, ர, ஈற்று உயர்திணைப் பெயர்களும், வை, து, ஈற்று அஃறிணைப் பெயர்களும், தாம், தான், ஆகிய பொதுப்பெயர்களும், இவைபோல்வனவும், விளிக்கப்படா.]

☞ "இன்னன" என்றதினால், பிறன், மற்றையான், முதலானவைகளையும் கொள்க.



**121.** THE CASUAL TERMINATIONS ஐ, கண், AND அது.

முதலை ஐயுறிற் சினையைக் கண்உறும்
அதுமுதற் காயிற் சினைக்கை ஆகும். [பெயர். சூ. 58.]

[முதற்பெயரை ஐ உருபு பொருந்தினால், சினைப்பெயரைக் கண் உருபு பொருந்தும்; அது உருபு முதற்பெயருக்கு வந்தால், சினைப்பெயர்க்கு ஐ உருபு வரும்.]

(உ-ம்.) (1.) மரத்தினைக் கொம்பின்கண் தறித்தான்.
(2.) மரத்தினது கொம்பினைத் தறித்தான்.

☞ "அது முதற்காயின்" என்பதற்கு, அக்கண்ணுருபு முதற்பெயர்க்கானால், எனவும்பொருள் கூறலாம்:—

(உ-ம்.) மரத்தின்கண் கொம்பைத் தறித்தான்.

[மரத்தினைக் கொம்பை வெட்டினான், என முதல், சினை, இரண்டிடத்திலும், ஐ உருபு வாராதென அறிக.]

**122.** வேற்றுமை மயக்கம்.—INTERCHANGE OF CASES.

யாதன் உருபின் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.
[பெயர். சூ. 60.]

[எந்த வேற்றுமையிற் சொல்லி இருந்தாலும், பொருள் சார்ந்த பக்கமே வேற்றுமை சாரும்.]

(உ-ம்.) "மனத்தால் மறுவிலர் ஏனுந்தாஞ் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர்." [நாலடி. 18. 10.]

[மனத்தால்=மனத்தில்; 3-ம் வேற்றுமை மயக்கம்.]



**123.** எட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல்.
THE GOVERNING WORD.

எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கேழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர். [பெயர்.சூ.62.]

[எல்லைப்பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமையும், ஆறும் வேற்றுமையும், பெயரைக்கொண்டு முடியும்; இவை அல்லாத மற்றை வேற்றுமைகள் எல்லாம், வினையைக்கொண்டு முடியும்; நான்காம், ஏழாம் வேற்றுமைகள், வினையையே அல்லாமல் வினையொடு பொருந்திவரும் பெயரையுங்கொண்டு முடியும், மிகுதியும் என்று புலவர் சொல்வார்.]

[வினையொடு பொருந்திவரும்பெயர்கொண்டு முடிதலுக்கு உதாரணம்.]

(1.) நோய்க்குக் கொடுக்கும் மருந்து.

(2.) மணியின்கண் இருக்கும் ஒளி.

[மற்றவற்றிற்கு உதாரணம், அந்தந்த வேற்றுமை உரையிற் காண்க.]



# சொல்லதிகாரம்.



## II-வது: வினையியல்.—OF VERBS.

### 124. வினை இன்னதென்பது.—DEFINITION OF VERB.

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே. [வினை. சூ. 1.]

["செய்பவன்" முதலிய ஆறு பொருளையுங் கொடுப்பது, தெரிநிலை வினை ஆம்.]

☞ "செய்பவன்" என்பதை மற்றைப் பாலினுங்கொள்க.

(உ-ம்.) குடத்தைவனைந்தான்.

[இதில், குயவன் செய்பவன்; மண், தண்டசக்கரம், முதலியன கருவி; வனைந்தஇடமே நிலம்; வனைதல் செயல்; இறந்தகாலமே காலம்; குடம் செய்பொருள்.]



### 125. குறிப்புவினை.—THE INDIRECT VERB.

பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.
[வினை. சூ. 2.]

["பொருள்" முதலிய ஆறுங் காரணமாகப் பிறந்து, முன் சொல்லிய "செய்பவன்" முதலிய ஆறனுள், கருத்தா ஆகிய ஒன்றைமாத்திரமே தெரிவித்துநிற்பது, குறிப்புவினை ஆம்.]

(உ-ம்.) பொன்னன் [பொருள்]; வானத்தான் [இடம்.]

[விகுதியால் செய்பவன் தோன்றியது.]

### 126. முற்றுவினை.—THE FINITE VERB.

பொதுஇயல் பாறையும் தோற்றிப் பொருட்பெயர்
முதல்அறு பெயர்அல தேறிலை முற்றே. [வினை. சூ. 4.]

[வினைக்குப் பொது இலக்கணம் ஆகிய "செய்பவன்" முதலிய ஆறையும் தோற்றுவித்து, பொருட்பெயர் முதல் ஆகிய ஆறுவகைப் பெயர் அல்லாத வேறொன்றையும் கொண்டு முடியாதன, குறிப்பு, தெரிநிலை, வினைமுற்றுகளாம்.]

(உ-ம்.) (1.) நடந்தான் பொன்னன்........ [தெரிநிலை.]
(2.) பெரியது நிலம்.............. [குறிப்பு.]



### 127. ஆண்பால் படர்க்கை.

THE THIRD PERSON SINGULAR, MASCULINE.

அன் ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை.
[வினை. சூ. 6.]

[அன், ஆன், ஆகிய விகுதிகளை உடைய சொற்கள், ஆண்பாற் படர்க்கைஆம்.]

(உ-ம்.) (1.) நடந்தனன் குழையன்........ [அன்]
(2.) நடந்தான் குழையான்........ [ஆன்.]



### 128. பெண்பாற் படர்க்கை.

THE THIRD PERSON SINGULAR, FEMININE.

அள்ஆள் இறுமொழி பெண்பாற் படர்க்கை.
[வினை. சூ. 7.]

[அள், ஆள், ஆகிய விகுதிகளை உடைய சொற்கள், பெண்பாற் படர்க்கைஆம்.]

(உ-ம்.) (1.) நடந்தனள் [அள்]. (2.) நடந்தாள் [ஆள்.]

### 129. பலர்பாற் படர்க்கை.

THE THIRD PERSON PLURAL, HIGH CASTE.

அர் ஆர் பவ்வூர் அகரம்மார் ஈற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.
[வினை. சூ. 8.]

[அர், ஆர், ப, மார், ஆகிய விகுதிகளை உடைய சொற்கள், பலர்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள், மார் விகுதியையுடைய சொல், பெயருடனல்லாமல், வினையுடனும் முடியும்.]

(உ-ம்.) (1.) நடந்தனர் [அர்]. (2.) நடந்தார்............... [ஆர்.]
(3.) நடப்ப.... [ப]. (4.) { பாடன்மார் எமர். / கொண்மார் வந்தார். } [மார்.]



### 130. ஒன்றன்பாற் படர்க்கை.

THE THIRD PERSON SINGULAR, NO CASTE.

துறுடுக் குற்றியல் உகர ஈற்ற
ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பின் ஆகும். [வினை. சூ. 9.]

[து, று, டு, ஆகிய விகுதிகளை உடைய சொற்கள், ஒன்றன் பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும்ஆம்; டு, குறிப்புவினைக்குமாத்திரமே உரியதாம்.]

(உ-ம்.) (1.) நடந்தது [து]. (2.) போயிற்று [று.]
(3.) பொருட்டு = பொருளை உடையது [டு.]



### 131. பலவின்பாற் படர்க்கை.

THE THIRD PERSON PLURAL, NO CASTE.

அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ணா தாகும். [வினை. சூ. 10.]

[அ, ஆ, ஆகிய விகுதிகளை உடைய வினைச்சொற்கள், பலவின்பாற் படர்க்கையும்; ஆ, எதிர்மறையிடத்தது ஆகும்.]

(உ-ம்.) (1.) நடந்தன [அ]. (2.) நடவா [ஆ.]

[ஆ குறிப்புக்கு வாராது.]



**132.** இருதிணைக்கும் பொதுவினை.—VERBS COMMON TO THE TWO CLASSES.

தன்மை முன்னிலை வியங்கோள் வேறில்லை
உண்டீ ரெச்சம் இருதிணைப் பொதுவினை. [வினை சூ.11]

[தன்மை, முன்னிலை, வியங்கோள் முற்றுகளும், வேறு, இல்லை, உண்டு, என்கிற குறிப்பு வினைமுற்றுகளும், பெயரெச்ச வினைஎச்சங்களும், இருதிணைக்கும் பொதுவினைகளாம்.]

"ஈரெச்சம்" என்றதினால், எதிர்காலப் பெயரெச்சமே செய்யும் என்னும் முற்றனமையின், அம்முற்றும் பொதுவினை என்பது தானே அமையும்.



**133.** தன்மை ஒருமைவினை.—THE FIRST PERSON SINGULAR.

கு டு து று என்னுங் குன்றியல் உகரமோ
டல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை. [வினை சூ.12

[கு, டு, து, று, ஆகிய குற்றியல் உகர விகுதிகளையும், அல் அன், என், ஏன், ஆகிய விகுதிகளையும், உடைய மொழிகள், இருதிணையில் மூன்று பாலுக்கும் பொதுவான ஒருமைத்தன்மை முற்றும்.]

கு, டு, து, று, இவைதாமே காலங்காட்டுகின்றன; அல், எதிர்கால வினைக்குமாத்திரம் வரும்; ஆதலால், இவை குறிப்புவினைக்கு வாரா.

(உ-ம்.) (1.) உண்கு ...................... [கு, எதிர்வு.]
(2.) உண்டு ...................... [டு, இறப்பு.]

(3.) வந்து, [து, இறப்பு]; வருது...... [து, எதிர்வு.]
(4.) சென்று, [று, இறப்பு]; சேறு .... [று, எதிர்வு.]
(5.) நடப்பல்...................... [அல், எதிர்வு.]
(6.) வந்தனன்...................... [அன்.]
(7.) வந்தனென்...................... [என்.]
(8.) வந்தேன்...................... [ஏன்.]
(9.) குழையினன்.................... [அன்.]

---

**134.** தன்மைப்பன்மை.—THE FIRST PERSON PLURAL.

அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை. [பெயர். சூ. 13.]

[அம், ஆம், ஆகிய விகுதிகளை உடைய சொற்கள், முன்னிலையாரையும்; எம், ஏம், ஓம், ஆகியவைகளை ஈற்றில் உடைய மொழிகள், படர்க்கையாரையும்; கும், டும், தும், றும், ஆகிய இவைகளை இறுதியாக உடைய சொற்கள், முன்னிலையாரையும், படர்க்கையாரையும்; தன்னோடு கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றும்.]

(உதாரணம்.)

(1.) சென்றனம், சென்றாம்............ [யாம்; யானும் நீயும்.]
(2.) சென்றனெம், சென்றேம், சென்றோம்.................... [யாம்; யானும் அவனும்.]
(3.) உண்கும், உண்டும், செல்லுதும், சேறும்...................... [யாம்; யானும், நீயும், அவனும்.]

☞ முன்னின்ற உம்மைகள் இரண்டையும், ஆக்க உம்மைகளாக்கி, அம் ஆம் என்பன, முன்னிலையாரையும் படர்க்கையாரையும், எம் ஏம் ஓம் இவை, படர்க்கையாரையும் முன்னிலையாரையும், தன்னொடுபடுக்கும் எனவும் பொருள் கூறுக:—

(உ-ம்.) (1.) உண்டனம்....... [யாம்; யானும், நீயும், அவனும்.]
(2.) உண்டனெம்.. ... [யாம்; யானும், அவனும், நீயும்.]

[இவ்வழக்குச் சிறுபான்மை வரும்.]

**135.** முன்னிலை உளப்பாட்டுப்பன்மை.

THE SECOND PERSON PLURAL. [*when the second person comes together with the third.*]

முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை.
[வினை. சூ. 15.]

[முன்னிலையோடு கூடிய படர்க்கையும், முன்னிலைஆம்.]

(உ-ம்.) வந்தீர், உண்மின், குழையீர். [நீயும் அவனும்.]



**136.** முன்னிலை ஒருமை.—THE SECOND PERSON SINGULAR.

ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா விற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே. [வினை. சூ. 16.]

[ஐ, ஆய், இ, ஆகிய ஈற்றுமொழிகளும், ஏவலில் வருகின்ற சகல ஈற்றுமொழிகளும், மூன்று பால்களுக்கும் பொதுஆகிய முன்னிலை ஒருமை வினைஆம்.]

(உதாரணம்.)

(1.) சென்றனை செல்கின்றாய் செல்கின்றி! [ஐ, ஆய், இ.]

(2.) செல்லாப் செல் நட படி சேறி...... [ஏவல் இறு.]

(3.) முடியினை, வேலாய் வில்லி........... [குறிப்புவினை.]

☞ "மூன்றும்" என்று பிரித்தமையால், ஏவல் வினைமுற்றுகள் குறிப்பு வினையில் இல்லை எனக்கொள்க.

[இ எதிர்காலங் காட்டுவதல்லாமல், சிறுபான்மை நிகழ்காலங் காட்டுதலும், இடைநிலை பெற்று வருதலும், உண்டு.]



**137.** முன்னிலைப்பன்மை.—THE SECOND PERSON PLURAL.

இர் ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின்அவற் றேவல். [வினை. சூ. 18.]

[இர், ஈர், ஆகிய இரு விகுதிகளையும் உடைய சொற்கள், இருதிணைப்பன்மை முன்னிலை வினைஆம்; மின் என்னும் விகுதியை உடைய சொல், அவற்றுள் ஏவல்ஆம்.]

(உ-ம்.) (1.) சென்றனிர், சென்றீர் [நீர்]...... [தெரிநிலை.]
(2.) வில்லினிர், வில்லீர் [நீர்]...... [குறிப்பு.]
(3.) சென்மின், உண்மின் [நீர்] ..... [ஏவல்.]

☞ உண்ணும் என, உம் விகுதியும், உண்ணுங்கள் என, அதன்மேல் கள் விகுதியும், ஏவற்பன்மையில் வரும்.



## 138. வியங்கோள்.—THE OPTATIVE.

கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் மென்ப. [வினை. சூ. 19.]

க, ய, ர, ஆகிய இவைகளை இறுதியாக உடையமொழிகள், வியங்கோள் முற்றுகளாம்; இவை மூவிடத்திலும் ஐம்பாலிலும் செல்லும் என்று, புலவர் சொல்லுவார்.]

(உ-ம்.) வாழ்க, வாழிய, வாழியர்.

☞ (1.) சிறுபான்மை அல் விகுதியும் வரும்; இதனையும், பிற இறுகளைப்பெற்று வியங்கோட் பொருளில் வருவன உண்டானால், அவற்றையும்,

"வகுத்துரையாதவும் வகுத்தனர் கொளலே,"

என, இவ்வாசிரியர் அல்இறு கூறியதாற் கொள்க;

(உ-ம்.) "நன்றே தரினும், நடுஇகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்." [குறள். 12. 3.]
[விடல் = விடுக.]

(2.) அகர விகுதியும் வரும்;

(உ-ம்.) "விண்ணிடை மதியினை மிகைவிதென்னவே." [இரா. 1. 5. 9.]
[என்ன = என்க.]

(3.) வழக்கத்தில், ஒட்டும் என்னும் விகுதி, முதல் குறைந்து, வரும்:—

(உ-ம்.) (1.) அவர் போகட்டும். [போகட்டும் = போக + (ஒ) ட்டும்.]
(2.) யாம் வரட்டும். [வரட்டும் = வர + (ஒ) ட்டும்.]

முன்னிலையில், வாக்கியத்தின் இடையிலேமாத்திரம், இவ்விகுதி பெற்ற வியங்கோள் வரும்;

(உ-ம்) நீ படிக்கட்டுமென்று, நான் பேசாதிருந்தேன்.

### 139. OF வேறு, இல்லை, AND உண்டு.

*வேறில்லை உண்டைம் பால்மூ விடத்தன.* [வினை. சூ. 20.]

[வேறு, இல்லை, உண்டு, ஆகிய மூன்று குறிப்புவினை முற்றும், ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கும் உரியனவாம்.]

(உ-ம்.) வேறு, இல்லை, உண்டு { யான், யாம், நீ, நீர், / அவன், அவள், அவர், / அது, அவை.

☞ மேற்கூறியவை அன்றி, வேண்டும், தரும், படும், என்னும் சொற்களும், ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவானவை எனக்கொள்க :*—

(உ-ம்.) (1.) "யானை அனையவர் நண்போரீஇ, நாய்அனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்." [நாலடி. 22. 3]

(2.) அவ்வேலை செய்யத்தகும்.

(3.) "நாச்செற்று விக்குள்மேல் வாராமுன், நல்வினை
மேற்சென்று செய்யப் படும்." [குறள். 34. 5.]

[இம்மூன்று சொல்லும் தேற்றப்பொருளே தரும் தொழிற்பெயர்.]



### 140. பெயர் எச்சம்.—RELATIVE PARTICIPLES.

*செய்த செய்கின்ற செய்யும்என் பாட்டிற்*
*காலமும் செயலும் தோன்றிப் பாலொடு*
*செய்வதாதி அறுபொருட் பெயரும்*
*எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.* [வினை. சூ. 21.]

[செய்த, செய்கின்ற, செய்யும், என்கிற மூன்று வாய்ப்பாட்டுச் சொற்களில், காலமும் செயலும் தோன்றி, பாலுடன்

---

* திணை, பால், இடம், எல்லாஞ்செல்வனவற்றை, அடியிற்கூறுஞ் சூத்திரத்தினால் அறிக:—

"வேறில்லை, உண்டு, யார், வேண்டும், தரும், படும்,
வினைபெயர்எச்சம், வியங்கோள், பத்தும்
திணை, பால், இடம், எலாம் செல்லும் என்க." [இலக்கணக்கொத்து.]

[வேறில்லை = வேறு, இல்லை; வினைபெயர்எச்சம் = வினைஎச்சம், பெயர் எச்சம்.]

"செய்பவன்" முதலிய ஆறுவகைப் பொருட்பெயர்களும் குறைந்து நிற்பன, பெயர்எச்ச வினை ஆம்.]

(உதாரணம்.)

(1.) உண்ட.................... { சாத்தன், கலம், வீடு, ஊண், இரா, சோறு.

(2.) கரியபசு, உள்ளகுணம்..... [குறிப்பு.]



**141.** செய்யும் என்னும் வாய்பாட்டுவினை, எச்சமாயும் முற்றாயும் வரும்விதம்.—OF THE FORM செய்யும், BOTH AS A RELATIVE PARTICIPLE AND A FINITE VERB.

செய்யும்என் எச்சஈற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்முந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே. [வினை. சூ. 22.]

[செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயர் எச்சத்தினுடைய ஈற்று உயிர்மெய் கெடுதலும், செய்யுளில் உம் விகுதி உந்து எனத் திரிதலும், அது வினைமுற்று ஆனால், அதன் ஈற்று உயிர் ஆனாலும் உயிர்மெய் ஆனாலும் கெடுதலும், உளஆம்.]

(உதாரணம்.)

(1.) ஆம்காரியம்......................... [ஆம் = ஆகும்.]
வாம்பரி............................ [வாம் = வாவும்.]
சாந்துணையும் கல்லாத வாறு?" [குறள். 40. 7.]
[சாம் = சாகும்; கு கெட்டது.]

(2.) "கூப்பெயர்க்குந்து நீர்க்கோழி."
[பெயர்க்குந்து = பெயர்க்கும்.]

(3.) "மருளினும் எல்லாம் மருண்ம."
[மருண்ம் = மருளும்; உயிர்கெட்டது.]

(4.) "மார்வினையொடுமுடிமே." [வினை. சூ. 8.]
[முடிமே = முடியுமே; யு கெட்டது.]
"யாதானும் நாடாம்ஆல், ஊராம்ஆல்." [குறள். 40. 7.]
[ஆம் = ஆகும்; கு கெட்டது.]

## 142. வினைஎச்சம்.—ADVERBIAL PARTICIPLES.

தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினைஎச் சம்மே. [வினை. சூ. 23.]

[செயலும் காலமும் விளங்கி, பாலும் வினையும் குறைய நிற்பது, வினைஎச்சம் ஆம்.]

☞ "வினை" எனப் பொதுப்படச் சொல்லியிருப்பதால், தெரிநிலைவினை குறிப்புவினைகளின் முற்றெச்சங்களும், வினையால் அணையும் பெயரும், தொழிற்பெயரும், குறைந்து நிற்கும் எனக்கொள்க.



## 143. வினைஎச்ச வாய்பாடுகள்.

DIFFERENT FORMS OF ADVERBIAL PARTICIPLES.

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினைஎச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்.
[வினை. சூ. 24.]

[செய்துமுதலியவற்றுள், முதலில் நின்ற ஐந்தும் இறந்தகாலத்தையும், நடுவில் நின்ற ஒன்றும் நிகழ்காலத்தையும், பின் நின்ற ஆறும் எதிர்காலத்தையும், காட்டுவனஆம்.]

இவற்றுள் "செய்து" என்பது ஒழிய, மற்றவை விகுதியால் காலம் காட்டும்.

[வேறுவகை வினை எச்சங்களை, "இன" என்றதனாற்கொள்க.]

[18-ம் பக்கத்தில் காண்க.]

☞ இச்சூத்திரத்திற் கூறிய வாய்பாடுகளுள், வான், பான், பாக்கு, என்பவை சிறுபான்மை தொழிற்பெயர்ப் பொருளினும் வரும்:—

(உ-ம்.) (1.) "கடாஅயினுஞ், சான்றவர் சொல்லார், பொருண்மேற்
படாஅ விடுபாக் கறிந்து." [நாலடி. 26. 5.]

[விடுபாக்கு = விடுதல்.]

(2.) நாம் வருவான் என்?.................. [வருவான் = வருதல்.]

(3.) நீங்கள் உண்பான் என் ?............. [உண்பான் = உண்ணல்,]

**144.** *வினையெச்சம் அவாவும் விதம்.*

THE WORDS WHICH FOLLOW THESE PARTICIPLES.

அவற்றுள், முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவும்ஏற் கும்பிற.

[வினை. சூ. 25]

[அவ்வினை எச்சங்களுள், முதலில் உள்ள நான்கும், இறுதியில் உள்ள வான், பான், பாக்கு, என்னும் மூன்று விகுதிகளை உடைய மூன்றும், செய்பவனைக்கொண்டு முடியும்; நடுவில் உள்ள ஐந்தும், இவைபோல்வன பிறவும், செய்பவனை அன்றி, மற்றவைகளையும் கொண்டு முடியும்.]

(உதாரணம்.)

(1.) தான் நடந்துவந்தான்............ [வினைமுதல்.]

(2.) தான் உண்டென மகிழ்ந்தான்....
பிறன் உண்டென மகிழ்ந்தான்... } [வினைமுதலும் பிறவும் கொண்டது.]

[மற்றவைகளுக்கும் உதாரணம் இப்படியே காண்க]



**145.** *மேற்கூறியதற்கு ஓர் புறனடை.*

A REMARK ON THE ABOVE.

சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்.

[வினை. சூ. 26]

["முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்" என்று சொன்ன வினைஎச்சங்கள் சினைவினைஆயின், அவை சினைவினை உடனே அன்றி, முதல்வினை உடனும் முடியும்.]

(உ-ம்.) கால் ஒடிந்து, மாடு விழுந்தது.

[ஒடிதல், சினைவினை; விழுதல், முதல்வினை.]

**146.** இதுவும் அதற்கு ஓர் புறனடை.

INTERCHANGE OF THE FORMS OF ADVERBIAL PARTICIPLES.

[ANOTHER REMARK ON THE SAME.]

சொற்றிரி யினும்பொருள் திரியா வினைக்குறை.
[வினை. சூ. 27.]

[வினை எச்சங்களுள், சொல் திரிந்தாலும், அவற்றின் பொருள் திரியா.]

(உதாரணம்.)

(1.) கோழி கூவிப் பொழுது விடிந்தது.......... [கூவ.]
(2.) யான் கொள்ளுவான், பொன் கொடுத்தான்.... [கொள்ள.]



**147.** ஆக்கம் INDISPENSABLE.

ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா. [வினை. சூ. 28.]

[ஆக்கத்தால் வருகின்ற வினைக்குறிப்புச் சொற்கள், ஆக்கச்சொற்கள் இல்லாமல் வரா.]

(உ-ம்.) (1.) சாத்தன் நல்லன் ஆயினன்.
[நல்லன், ஆக்க வினைக் குறிப்பு; ஆயினன், ஆக்கம்.]*
(2.) சாத்தன் நல்லன்...... [ஆக்கம் தொக்கது.]



**148.** செய்யும் என்னும் முற்று.

THE FINITE VERB OF THE FORM செய்யும்.

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே. [வினை. சூ. 29.]

[செய்யும் என்னும் முற்றுவினை, பலர்பாற் படர்க்கை, முன்னிலை, தன்மைகளில் செல்லாது.]

என்று சொல்லவே, மற்றை நான்கு பாலினும் செல்லும் எனக் கொள்க.

(உ-ம்.) (1.) அவன், அவள், அது, அவை, { உண்ணும்.

(2.) "மலை நலம் உள்ளும் குறவன்." [நாலடி. 36. 6.]

(3.) "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும், தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்." [குறள். 7. 9.]

[உள்ளும் = உள்ளுவான்; உவக்கும் = உவப்பாள்.]



**149.** யார் என்பதைக்

யார்என் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.

[வினை. சூ. 30.]

[வினாப்பொருளைத் தருகிற யார் என்கிற வினைக்குறிப்பு முற்று, உயர்திணை முப்பால்களுக்கும் பொதுவினையாம்.]

(உ-ம்.) அவன், அவள், அவர், } யார்.

☞ யார் என்பது ஆர் என மருவி வரும். [48-ம் சூ. காண்க.]



**150.** "எவன்" என்பதைக் குறித்து.—OF எவன்.

எவன் என் வினாவினைக் குறிப்பிழி இருபால்.

[வினை. சூ. 31.]

[வினாப்பொருளைத் தருகிற, எவன் என்னும் குறிப்புவினை முற்று, அஃறிணை இரண்டு பாலுக்கும் பொதுவினையாம்.]

(உதாரணம்.)

(1.) அஃது, அவை, எவன்.

(2.) "சிறை காக்கும் காப்பெவன் செய்யும்?" [குறள். 6. 7.]

☞ எவன், என்பது மருவி என், என்னை, என்ன, ஏன், எனவும் வரும்.

(உ-ம்.) (1.) "நீயோ அன்றேனென்றாய்." [இராமாயணம்.]

(2.) "காக்கில் என்? காவாக்கால் என்?" [குறள். 31. 1.]

**151.** *முற்று எச்சமாய் வருதல்.*—FINITE VERBS USED AS PARTICIPLES.

*வினைமுற் றேவினை எச்சம் ஆகலும்*
*குறிப்புமுற் றீரெச்சம் ஆகலும் உளவே.*

[வினை. சூ. 32.]

*[தெரிநிலை வினைமுற்றே வினைஎச்சம்ஆகி வருதலும், குறிப்பு முற்று வினைஎச்சம் ஆகியும் பெயர்எச்சம் ஆகியும் வருதலும், உளவாம்.]*

*(உதாரணம்.)*

(1.) *போனான் நின்றான் = போய்நின்றான்.*

(2.) *அவன் வேலினன் வந்தான் = வேலினன் ஆகிவந்தான்.*

*[வினை எச்சம் ஆனது]*

(3.) *"வெந்திறலினன் விறல் வழுதியொடு." [திறலினனாகிய வழுதி.]*

*[பெயர் எச்சம் ஆனது.]*



# சொல்லதிகாரம்.



## III-வது: இடைச்சொல்லியல்.—OF PARTICLES.

### 152. பலவகை இடைச்சொற்கள்.—DIFFERENT KINDS OF PARTICLES.

வேற்றுமை வினைசா ரியைஒப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியில் தனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஓர்இடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.
[இடை. சூ. 1.]

[வேற்றுமை உருபுகள், வினை உருபுகள், சாரியை உருபுகள், ஒப்புருபுகள், தத்தம் பொருளைக் காட்டிய சொற்கள், இசைநிறைக்கிற சொற்கள், அசைநிலைச் சொற்கள், குறிப்பினால் வருஞ் சொற்கள், என்கிற எட்டுவகையை உடையனவாய் தனித்து வழங்கப்படாமல், பெயரினும் வினையினும், பின்னும் முன்னுமாகிய ஆறனுள், ஓர் இடத்தில், ஒன்றாயினும் பலவாயினும் வந்து ஒன்றுபட்டு நடப்பது, இடைச்சொல்லாம்.]



### 153. இடைச்சொல் ஆகிய ஏ.—THE PARTICLE ஏ.

பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை எனஆ றேகா ரம்மே. [இடை. சூ. 3.]

[ஏகாரம் பிரிநிலை முதலான ஆறு பொருளையும் தரும்.]

(உ-ம்.) (1.) அவனே செய்தான்.......... [பிரிநிலை.]
(2.) நீயே வந்தாய்?................ [நீயா? வினா.]
(3.) "நிலனே நீரே தீயே வளியே.".... [எண்.]
(4.) "செய்யும் என் முற்றே."....... [ஈற்றசை.]
(5.) நானே செய்தேன்............... [தேற்றம்=துணிவு.]
(6.) "ஏ ஏ இவள் ஒருத்தி பேடியோ." [இசைநிறை.]

☞ இவையே அன்றி, ஏ எதிர்மறைப் பொருளையும் தரும்.

(உ-ம்.) யானே செய்தேன்............ [யான் செய்திலேன்; எதிர்மறை.]



## 154. இடைச்சொல் ஆகிய ஓ.—THE PARTICLE ஓ.

ஒழிஇசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனஎட் டோவே. [இடை சூ. 4]

[ஓகாரம் ஒழிஇசை முதலான எட்டுப்பொருளையும் தரும்.]

(உதாரணம்.)

(1.) இங்கிருக்கவோ வந்தாய்............. [ஒழியிசை.]

[இருக்கவல்ல, போக வந்தாய்; என ஒழிந்த சொல் கருதி நிற்கின்றது.]

(2.) அவனோ செய்தான்? ............... [வினா.]

(3.) ஓ ஓ பெரியன்!.................... [உயர்வு சிறப்பு.]
ஓ ஓ சிறியன்!........................ [இழிவு சிறப்பு.]

(4.) நானோ செய்தேன்................. [நான் செய்திலேன், எதிர்மறை.]

(5.) ஒருவனைத் தூரத்தில் கண்டு, சாத்தனோ, அல்லன்; கொற்றனோ, அல்லன்; என்பது.................. [தெரிநிலை.]

[அல்லாமை தெரிந்தவிடத்தில் நிற்கின்றது.]

(6.) ஓ ஓ என்ன உணர்வில்லையோ......... [கழிவு.]

[கழிவு இரக்கப்பொருள்.]

(7.) "கட்டுரைப்பதென்கொலோ?"....... [அசைநிலை.]

(8.) அவனோ சொன்னான்............... [பிரிப்பு.]

[பலருள் இருந்து ஒருவனைப் பிரித்துச் சொல்லல்.]

### 155. என, என்று, என்னும், இடைச்சொற்கள்.

THE PARTICLES என AND என்று.

வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்
எனவெனும் மொழிவரும் என்றும் அற்றே.
[இடை. சூ. 5.]

[என, என்று, என்னும் இடைச்சொற்கள் வினை முதலிய ஆறு பொருளினும் வரும்.]

(உதாரணம்.)

(1.) "நீத்தாரெனக் கைவிடலுண்டோ" .......... [வினை.]
(2.) "நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக்கொண்டாரை" [பெயர்.]
(3.) ஒல்லென ஒலித்தது........................ [குறிப்பு.]
(4.) "பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலே" .... [இசை.]
(5.) கை எனக் கால் என........................ [எண்.]
(6.) வெள்ளென விடிந்தது...................... [பண்பு.]



### 156. உம் என்கிற இடைச்சொல்.—THE PARTICLE உம்.

எதிர்மறை சிறப்பையம் எச்சம்முற் றளவை
தெரிநிலை ஆக்கமோ டும்மை எட்டே. [இடை. சூ. 6.]

[உம் என்னும் இடைச்சொல், எதிர்மறை முதலிய எட்டுப் பொருள்களினும் வரும்.]

(உதாரணம்.)

(1.) செய்தலும் கூடும்.................. [எதிர்மறை.]
(2.) "குறவரும் மருளும் குன்றம்"......... [உயர்வு சிறப்பு.]
"மீனும் நாறின; வேறினி வேண்டுமோ" [இழிவு சிறப்பு.]
(3.) பத்தாயினும் எட்டாயினும் கொடு.... [ஐயம்.]
(4.) கொற்றனும்வந்தான்... [சாத்தன் வந்ததன்றி, எனப்பொருள்கொண்டால், இறந்ததுதழுவிய எச்ச உம்மை; இனிச் சாத்தனும் வருவான், என்றர்த்தம்கொண்டால், எதிரது தழுவிய எச்ச உம்மை.]

(5.) ஐம்புலனும் அறிவுக்கிடம்........ [முற்றும்மை.]
(6.) நானும் அவனும் போனோம்........ [எண்.]
(7.) நானும் அல்லன் நீயும் அல்லன்.... [தெரிநிலை.]
(8.) பாலும் ஆயிற்று.................. [ஆக்கம்.]

[அதுவே மருந்தும் ஆயிற்று.]



**157.** சில எண்ணிடைச் சொற்கள்.—CERTAIN CONNECTIVE PARTICLES.

பெயர்ச்செவ் வெண்ணே என்று எனாஎண்
ணுன்குந் தொகைபெறும் உம்மைஎன் றெனஒ
டிந்நான் கெண்ணும்அஃ தின்றியும் இயலும்.
[இடை. சூ. 9]

[பெயர்களின் இடையிலே, எண் இடைச்சொல் தொக்கு நிற்க வரும் செவ்வெண், ஏகாரம், என்று, எனா, என்னும் நான்கெண்ணும், தொகை பெற்று நடக்கும்; உம்மை, என்று, என, ஒடு, ஆகிய இந்நான்கெண்ணும், தொகை பெற்றும் பெருமலும் நடக்கும்.]

(உ-ம்.) (1.) சாத்தன், கொற்றன், பூதன், மூவரும் வந்தார்.
(2.) சாத்தனே, கொற்றனே, பூதனே, மூவரும் வந்தார்.

[மற்றவைகட்குதாரணம் ஆராய்ந்துகொள்க.]



**158.** THE PARTICLES என்று, என, AND ஒடு.

என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும். [இடை சூ.10.]

[என்று முதலிய மூன்று சொல்லும், எண்ணப்படும் பொருள்தோறும் நிற்பதே அல்லாமல், ஓரிடத்தில் நின்றும், வெவ்வேறாய் எண்ணப்படுகின்ற பொருள்கள்தோறும், பொருந்தும்.]

(உ-ம்.) (1.) "பகை, பாவம், அச்சம், பழி, என நான்கும்."
(2.) நன்மை, தீமை, என இரண்டும்.
(3.) "சுவை, ஒளி, ஊறோசை, நாற்றம், என்றைந்தும்."

[ஊறோசை = ஊறு, ஓசை.]

### 159. THE PARTICLE மன்.

மன்னே அசைநிலை ஒழிஇசை ஆக்கம்
கழிவு மிகுதி நிலைபே றாகும். [இடை. சூ. 13.]

["மன்" என்னும் இடைச்சொல், ஒழியிசை முதலிய ஆறு பொருளையுந் தரும்.]

*( உதாரணம். )*

(1.) "அது மற்கொண்கன்றேரே."........... [அசைநிலை.]
[மன் என்பதற்கு வேறுபொருள் இல்லை.]

(2.) "கூரியதோர் வாள்மன்."............... [ஒழியிசை.]
[இரும்பை வெட்டியது என்பது ஒழிந்து நின்றது.]

(3.) நெடியன் மன்.......................... [ஆக்கம்.]
[அவனே வலியனுமானான்.]

(4.) "சிறிய கட்பெறினே எமக்கீயுமன்னே."... [கழிவு.]
[அவனிறந்ததனால், எமக்குக் கொடுத்தல் ஒழிந்தது.]

(5.) "எந்தை எமக்கருளுமன்."............. [மிகுதி.]
[மிகுதியும் அருளும்.]

(6.) "மன்னா உலகத்து மன்னியது புரிமே."... [நிலைபேறு.]
[மன்னல், இடைச்சொல்லடியாய்ப் பிறந்த தொழிற் பெயர்.]
[மன்னல் = நிலைபெறுதல்.]



### 160. மற்று என்னும் இடைச்சொல்.—THE PARTICLE மற்று.

வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே. [இடை. சூ. 14.]

[வினைமாற்று முதலிய பொருளில், மற்று என்பது வரும்.]

*(உ-ம்.)* "மற்றறிவாம் நல்வினை."........ .... [வினைமாற்று.]
"மற்றுத்தம் வல்லுரு அஞ்சன்மின்." [அசைநிலை.]
"மற்றென் செய்யார்."...... ...... [பிறிது.]

**161.** கொல் என்னும் இடைச்சொல்.—THE PARTICLE கொல்.

கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே. [இடை. சூ. 16.]

[கொல் என்பது ஐயம், அசைநிலை, என்னும் இரண்டு பொருளிலும் வரும்.]

(உதாரணம்.)

(1.) சாத்தன் கொல் கொற்றன் கொல் ............ [ஐயம்.]
(2.) "யாதுகொல் இதுவென எண்ணல் தேற்றலர்." [அசைநிலை.]



**162.** அந்தில், ஆங்கு, என்னும் இடைச் சொல்.—THE PARTICLES அந்தில் AND ஆங்கு.

அந்தில்ஆங் கசைநிலை இடப்பொரு ளவ்வே. [இடை. சூ. 18.]

[இவ்விரண்டு இடைச்சொற்களும், அசைநிலைப் பொருளையும், இடப்பொருளையும், தரும்.]

(உதாரணம்.)

(1.) "அந்திற் கழலினன்."...................... [அசைநிலை]
(2.) "அந்திற் கொழூஉற்காணிய."... ........... [இடம்.]
(3.) "சொரிந்திட்டரிப்பரித்தாங்கு."........... [அசைநிலை.]
(4.) "ஆங்குத்தாம் போற்றிப்புனைந்த உடம்பும்." [இடம்.]



**163.** THE PARTICLE அம்ம.

அம்ம உரைஅசை கேண்மினென் றாகும். [இடை.சூ.19.]

[அம்ம என்னுஞ் சொல், உரை அசைப் பொருளிலும், கேண்மின் என்னும் ஏவற் பொருளிலும், வரும்.]

(உதாரணம்.)

(1.) "அது மற்றம்ம."............. [உரையசை.]
(2.) "அம்ம! வாழி தோழி."...... [கேண்மின்=கேளுங்கள்.]

(3.) "அம்ம! இதிதுவென வகலு நீணெறி." [இரா. 1. 6. 44.]

[அம்ம = கேண்மின்.]

(4.) "அம்மா! பெரிதென்றகமகிழ்க." [நீதிநெறி. 15.]

[அம்மா என்பது வியப்பைக் குறிக்கின்ற ஓரிடைச்சொல் எனக்கொள்க.]



**164.** *யா முதலிய இடைச்சொற்கள்.*—THE PARTICLES *யா*, &c.

*யாகா பிறபிறக்[1]கரோபோ மா[2]திகும்*
*சின்குரை ஒரும்போலும் இருந்[3]திட்*
*டன்[4]றும் தாம்தான் கின்றுநின் றசைமொழி.*

[இடை. சூ. 22.]

[யா முதலியவை, எவ்விடங்களிலும் வருகிற அசைச் சொற்களாம்.]

[உதாரணம் வரும் இடத்திற காண்க.]

1 பிறக்கு, அரோ;—2 மாது, இகும்;—3 இருந்து, இட்டு;—4 அன்று, ஆம்.



# சொல்லதிகாரம்.



## IV-வது: உரிச்சொல்லியல்.

### OF ADJECTIVES AND ADVERBS.



**165.** உரிச்சொல் இவை என்பது.—ADJECTIVES AND ADVERBS.

*பல்வகைப். பண்பும் பகர்பெயர் ஆகி*
*ஒருகுணம் பல்குணம் தழுவிப் பெயர்வினை*
*ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல்.* [உரி. சூ. 1.]

[இசை, குறிப்பு, பண்பு, ஆகிய பல வேறு வகைப்பட்ட பண்புகளையும் தெரிவிக்கிற பெயர்ஆகி, ஒரு குணத்தையும், பல குணத்தையும் சார்ந்து, பெயர் வினைகளை விட்டு நீங்காமல், செய்யுளுக்கு உரியனவாய் நிற்பன, உரிச்சொல்ஆம்.]

☞ இசை = ஓசை; குறிப்பு மனத்தால் அறியப்படுவது; பண்பு ஐம்புலன்களால் அறியப்படுவது.



**166.** THE WORDS சால, &c.

*சால உறு தவ நனி கூர் கழி மிகல்.* [உரி. சூ. 15.]

[இவை, மிகுதி என்கிற ஒரு குணத்தைக் குறிக்கும், உரிச்சொற்கள்ஆம்.]

(உதாரணம்.)

(1.) "சாற்றுங்கொல், சாலச் சிரித்து."...... [சால வினையெச்சம்.]
(2.) "உறு புலி ஊன் இரை இன்றி."....... [உறு.]
(3.) "தவ உயர்ந்தன.".................. [தவ.]
(4.) "கல்லாதவரும் நனி நல்லர்."........ [நனி.]
(5.) "புந்தி கூர் அருள் விதுரன்."........... [கூர்.]
(6.) "கல்வியான் ஆய கழிநுட்பம் கல்லார்." [கழி.]



